# வைதிக தர்ம வர்த்தனீ



மலர் 13
இதழ் 3

ஆசிரியர் :
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா.

விகாரிஞு
மார்கழிமீ

# வைதிக தர்ம வர்த்தனீ

यतो धर्मः ततः कृष्णः



यतः कृष्णः ततो जयः

धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | விகாரி௵ மார்கழிமீ | இதழ் 3



## பொருள் அடக்கம்.


| | |
|---|---|
| மார்கழிமீ பஞ்சாங்கம் | 82 |
| புத்தக விமர்சனம் | 84 |
| ஸ்ரீ ஆச்சார்யாளின் அம்ருத மொழி | 84 |
| அக்னி கார்யத்தின் விளக்கம் | 85 |
| சாந்தோக்ய உபநிஷத் | 89 |
| அஷ்டாவக்ர கீதை | 91 |
| பால பாரதம் | 93 |
| மஹாபாரத பூஞ்சோலை | 97 |
| மார்கழிமீ விசேஷம் | 100 |
| உபமன்யு பக்கவிலாசம் | 101 |
| நவரஸம் | 104 |
| பஞ்சாயுத ஸ்தோத்ரம் | 107 |
| தியாகோபநிஷத் | 110 |
| குமதி சுமதி ஸம்வாதம் | 113 |
| ஆயுர் வேதம் | 115 |
| ஸந்தேக விளக்கம் | 117 |
| தார்மிகச் செய்திகள் | 118 |
| மார்கழிமீ கோசாரபலன் | 119 |
| கல்கி புராணம் | 33—48 |


வருஷ சந்தா ரூ. 5.
தனிப்ரதி 44 ந. பை.

காரியாலயம் :
வைதிக தர்ம வர்த்தனீ,
கடவாசல்,
வடகால் போஸ்ட்,
சீர்காழி வழி,
(தஞ்சை ஜில்லா.)

விகாரிஸு மார்கழிமீ ஹேமந்தருது. தக்ஷிணாயனம்.

| தமி. | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ஸ்ரா திதி. |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 16 (1959ஸு டிசம்பர் மீ) | புதன் | ப்ர. | 15-38 | திரு. | 54-15 | சி. | த்வி. |
| 2 | 17 | வியா. | த்வி. | 21-17 | புன. | 60-00 | அ. | — |
| 3 | 18 | வெள். | த்ரி. | 26-20 | ,, | 0-40 | சி. | த்ரி. |
| 4 | 19 | சனி | சது. | 30-40 | பூச. | 6-27 | சி. ம. | சது. |
| 5 | 20 | ஞா. | பஞ். | 33-58 | ஆயி. | 11-23 | சி. ம. | பஞ் |
| 6 | 21 | திங். | ஷஷ். | 36-00 | மக. | 15-15 | ம. சி. | ஷஷ் |
| 7 | 22 | செவ். | ஸப். | 36-30 | பூர. | 17-38 | சி. அ. | சப். |
| 8 | 23 | புத. | அஷ். | 35-17 | உத். | 18-27 | அ. சி. | அஷ் |
| 9 | 24 | வியா. | நவ. | 32-13 | ஹஸ். | 17-27 | சி. | நவ. |
| 10 | 25 | வெ. | தச. | 27-20 | சித். | 14-42 | சி. | தச. |
| 11 | 26 | சனி | ஏகா. | 20-50 | சுவா. | 10-15 | அ. சி. | ஏ. த். |
| 12 | 27 | ஞா. | த்வா. | 12-57 | விசா. | 4-27 | ம. | த்ர. |
| | | | | | அனு. | 57-35 | | |
| 13 | 28 | திங். | த்ர. | 4-05 | கேட். | 50-00 | சி. | சசி. |
| | | | சசி. | 54-43 | | | | |
| 14 | 29 | செவ் ● | அமா. | 45-12 | மூல. | 42-22 | அ. சி. | அமா |
| 15 | 30 | புதன் | ப்ர. | 36-05 | பூரா | 35-05 | அ. | ப்ர. |
| 16 | 31 | வியா. | த்வி. | 27-53 | உத்தி | 28-42 | சி. | த்வி. |
| 17 | 1 (1960ஸு ஜனவரி மீ) | வெள். | த்ரி. | 21-00 | சிர. | 23-40 | ம. சி. | த். ச. |
| 18 | 2 | சனி | சது. | 15-50 | அவி. | 20-18 | சி. அ. | பஞ். |
| 19 | 3 | ஞா. | பஞ். | 12-42 | சத. | 19-00 | சி. | ஷஷ் |
| 20 | 4 | திங். | ஷஷ். | 11-48 | பூரட். | 19-48 | ம. சி. | சப். |
| 21 | 5 | செவ். | ஸப். | 13-02 | உத்தி. | 22-42 | அ. | அஷ் |
| 22 | 6 | புதன் | அஷ் | 16-15 | ரேவ. | 27-27 | ம. | நவ. |
| 23 | 7 | வியா | நவ. | 21-00 | அசு. | 33-35 | அ. சி. | — |
| 24 | 8 | வெள். | தசமி | 26-50 | பர. | 40-40 | சி. | தச. |
| 25 | 9 | சனி | ஏகா. | 33-17 | க்ருத். | 48-10 | அ. | ஏகா. |
| 26 | 10 | ஞா. | த்வா. | 39-47 | ரோ. | 55-42 | சி. | த்வா |
| 27 | 11 | திங். | த்ர. | 46-00 | மிருக. | 60-00 | அ. | த்ர. |
| 28 | 12 | செவ். | சசி. | 51-43 | ,, | 2-50 | சி. ம. | சசி. |
| 29 | 13 | புதன் ○ | பௌ. | 56-45 | திரு. | 9-27 | சி. | பௌ |

11உ ஏகாதசி, 14உ அமாவாஸை, 12, 27உ ப்ரதோஷம்,
25உவை. ஏகாதசி, க்ருத்.வ்ரதம், 29உபோ.டி., ஆருத்ராதர்சனம்.

***நித்ய வாழ்க்கையில் மதாநுஷ்டானம் நம் மதத்திலே ஸ்நானம் ஸந்த்யை ஜபம் நிவேதனமின்றி உண்ணாதே.***

# நமது குற்றமும் காரணமும்.

குற்றம் செய்வது மநிதர் இயல்பு. அதைப் பொருப்பது ஸாதுக்கள் இயல்பு. ஆசிரியர் என்ற முறையிலே அறிந்தே சில தவறுகளைச் செய்கிறேன். அது நமது மனதை உருத்தாமலில்லை. வாசகர்கள் அதை க்ஷமித்து கண்டிக்காமல் இருந்ததால், நம் பொறுப்பை வாசகர்களும் அறிந்தே மௌநமாயிருக்கின்றனர் என ஆறுதல் ஏற்பட்டது. மிகச் சிலரே அவரவர்களுடைய அபிப்பிராயத்தைக் கடிதம்மூலம் தெரிவித்திருக்கின்றனர். ஒரு சிலர் பஞ்சாங்கம், ஜோஸ்யம், ஆயுர் வேதம் முதலிய விஷயங்கள் வேண்டாமென்கின்றனர். பலர் பஞ்சாங்கம், ஆயுர்வேதம் ஜோஸ்யம் முதலிய விஷயங்கள் தொடர்ந்து வர வேண்டும் என்கின்றனர்.

மூக பஞ்சாசதி, ரிஷிகள் சரிதம், யஜுர்வேத பாஷ்யம், ஸ்காந்தம் முதலியன பூர்த்தியாகாமல் பாதியிலேயே நிருத்தி விட்டீர்களே என்கின்றனர் சிலர். அவர்களுடைய விருப்பத்தை பூர்த்திசெய்ய வேண்டியதுதான் கடமை. ஆனால் பலரிடம் நேரில் பேசும் போது "ஓராண்டோடு பூர்த்தியாகும் நூல்களையே வெளியிடுங்கள், பல்லாண்டு தொடர்வது வேண்டாம்" என்றதால் பாதியில் நிறுத்தாமல் ஒருகட்டத்தில் நிறுத்தினோம். ஸ்காந்தம் பிரும்மோத்தர கண்டம் பூர்ணமாகவே முடிந்தது.

ஸஹஸ்ரநாமாவில் சில தவறுதல்களைக் காட்டி பத்ரிகையிலேயே அதை ப்ரசுரிக்கும்படி ஒரு சந்தாதாரர் விருப்பம். ஆழ்ந்து அவர் படித்ததற்கும், தவறை எடுத்துக் காட்டியதற்கும் ஸந்தோஷம்! நன்றி! நாளாகிவிட்டதாலும் புத்தகமாக வெளிவந்ததாலும் அடுத்த பதிப்பில் அவைகளை வெளியிட உத்தேசம். மன்னிக்கவும். நன்றி.

வயதானவன்! போதிய ஸஹாயமில்லாதவன்!! ஏதோ முடிந்தவரை தர்மத்தொண்டு செய்கிறேன்!! தார்மிக பத்ரிகை இது. இது நம்முடையது!! என்று உதாரமான எண்ணத்துடன், பத்ரிகையை ஆதரித்து வரும்படி அனைவரையும் வேண்டுகின்றேன். பஞ்சாங்கம், கோசார பலன், ஆயுர்வேதம் இவைகளை சிலர் வேண்டாமென எழுதுவதால் இவ்வாண்டு முடிவுடன் நிறுத்தலாமா என யோசனை. பலர் நிறுத்த கூடாதெனில் தொடரும்.

ஆசிரியர்.

---

## ஸ்ரீ ஜகத்குருவுக்கு பிக்ஷை.

5-12-59 சனிக்கிழமை வாநகரில் நமது ஆசிரியர் அவரது குருவின் ஆராதனை தினத்தில் ஸ்ரீ ஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகளுக்கு ஒரு பிக்ஷை நடத்தினர்.

**ஸ்நாநம் செய்யாமல் உண்பது மலபோஜனமாம்.**

# புஸ்தக அறிமுகம்.

**18 புராணங்களில் 2வதுபாகம்** (தேவீபாகவதம், விஷ்ணு பாகவதம், பவிஷ்ய, நாரதீயம் அடங்கியது.) 2 தேவீ பாகவதம். 3 ஸ்தோத்ர சிந்தாமணி. 4 புவனேச்வரீ த்ரிசதீ. 5 ஸௌபாக்ய அஷ்டோத்ரம் இவைகள் ஒரு காபிகூட கிடையாது. இனி அச்சிடவும் உத்தேசமில்லை.

1 முதல் 10 ஆண்டு வரையுள்ள வை. த. வர்த்தனீ காபி ஒன்றுகூட இல்லை. 11–12 வருஷ காபிகளில் மிக ஸ்வல்பமே கைவசமுள்ளது. தக்க ஸமயத்தில் வேண்டியதை வாங்கிக்கொள்ளுங்கள். ஆன பின் ஒரு காபி கூட கிடைக்காது.

**ஸங்க்ராந்தி பூஜையும், கோபூஜையும்:** மாம்பலம் குருகுல வெளியீடு. 27 நயா பை. ஸ்டாம்பு அனுப்பி குருகுலத்தில் பெற்றுக் கொள்ளலாம். (ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரே சமயத்தில் உபாத்யாயர் வரமுடியாதென ஸர்வோபகாரமாக இது வெளியிடப்பட்டது.)

**ஸ்ரீ ராமாநுஜன்:** மாதாந்தர ஸ்ரீவைஷ்ணவ தமிழ் பத்ரிகை. சந்தா ரூ. 5. ஆசிரியர்: பிரதிவாதி பயங்கர ஸ்ரீ அண்ணங்கராசாரியர், காஞ்சி. 11 ஆண்டுகளாக நடக்கின்றது. ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்துடன் ஆஸ்திகருக்குப் பொதுவான பல விஷயங்கள் உண்டு. இம்மாத இதழில் ஸ்ரீ பிள்ளைப்பெருமாளய்யங்கார் அருளிய 108 திருப்பதி அந்தாதி வந்துளது.

## ஸ்ரீ ஆசார்யாளின் அம்ருத மொழி.

மநதை வில்லாகவும் இந்திரியங்களை அம்பாகவும் வைத்திருக்கிருள் தேவி. தேவியை நாம் தியாநம் செய்தால் மநதாலும் புலன்களாலுமுண்டாகும் தீமை நம்மிடம் வராது. மநம் வெளியில்போகாதிருக்க அம்பிகையை த்யாநம்செய்.

சிவன் கருணைமூர்த்தி! தேவிக்குப் பாதி உடலைத் தந்தார். அது அர்த்தநாரீச்வர ரூபம். பாதி உடலை விஷ்ணுவுக்குத் தந்தார். சங்கரநாயனர் கோயிலில் அதைக் காணலாம். உடலையே அளித்த மூர்த்தி நமக்கு எதைத்தான் தரமாட்டார்? ஆனால் அன்புடன் அவரை ஸதா த்யாநம் செய்யவேண்டும். நாமத்தையேனும் ஜபம் செய்யவேண்டும்.

பி. சுப்ரமண்யன், கடகம்.

ஜபம் செய்யாமல் உண்பது சீ, ரத்த போஜனமாம்.

  



# அக்னி கார்யத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம் ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி.)

அக்னியும் தீர்த்தமும் ஸகல தேவதா ஸ்வரூபம் என்று வேதம் ஸ்மிருதி புராணம் முதலியன கோஷிக்கின்றன. ஸகலமான ஜீவராசிகளும் இவ்விரண்டாலுமே ஜீவிக்கின்றன. இவ்விரண்டில் ஒன்றையும் விடமுடியாது. ஆகையால் இவ்விரு தேவதைகளும் எல்லோருக்கும் மிக முக்யமானவர்கள். அக்னி உபாஸனையைப் பற்றிவெளியிடுவோம்.

அக்னி உபாஸனையில் முக்ய அதிகாரிகள் பிராம்மணர் க்ஷத்ரியர் வைஶ்யர். கர்ப்பாதானம் முதல் குழந்தைகளுக்காக வேண்டிய ஸகல கார்யங்களையும் பிதா செய்துவிடுகிறார். உபநயநம் ஆனபிறகு ஸமிதாதானம் காயத்ரீ ஹோமம் இவற்றை சிஷ்யனும் உபாகர்மா வ்ரதம் முதலியவற்றை சிஷ்யனுடன் ஆசார்யனும் செய்து க்ஷேமத்தைத் தேடுகிறார்கள். அதன்பிறகு விவாஹமானவுடன் ஔபாஸநம் முதலிய கார்யங்களையும் இன்னும் இதே அக்னியிலேயே ஶாந்திக பௌஷ்டிக கர்மாக்களும் செய்கிறோம். இப்படி நமக்கு எல்லா நன்மைகளையும் அக்னி பகவான் மூலமே தேடிக்கொள்ளலாம். அக்னி உபாஸனைக்குப் பிறகுதான் அவஶ்யமானால் வேறு தேவதைகளை உபாஸிக்கலாம். அக்னி உபாஸனை இன்றி செய்யும் வேறு எந்த கர்மாவுக்கும் பூர்ண பலன் கிடைக்காது. அக்னி உபாஸனத்திற்குப்பிறகு எந்த தேவதையை பூஜித்தாலும் பூர்ணமான பலன் கிடைக்கும்.

தற்காலத்தில் எல்லோருக்கும் பணத்தேவை அதிகரித்து வருகின்றது. அது நிறைவேற அக்னிபகவான்தான் அனுக்ரஹம் பண்ணவேண்டும். 'ஶ்ரியமிச் சேத் ஹுதாஶநாத்' என்ற ஸ்மிருதி கூறுகிறது. தநம் மாத்ரமின்றி யார் எந்த விதமான கார்யம் ஸித்திக்கவேணும் என்று இச்சித்தாலும் அது ஸித்திப்பதற்கும் அக்னிபகவானே அருள் புரிவார். சரீர ஸௌக்யத்திற்காகவும் புத்ர கிருஹாதி ஸித்திக்காகவும் மற்றும் பலவிதமான பலன்களையும் அடைந்து வாழவும் வேதம் முதலியன பலவிதமான பிரயோகங்களைக் கூறுகின்றன. ஆதலால் முதலில்

---

ஸ்வாமி நிவேதநமின்றி உண்பது புழு போஜநமாம்.

அக்னியை உபாஸிப்பதுதான் உத்தமம். மற்ற தேவதைகளை உபாஸித்தால் தாத்காலிகமாக சில ஸௌகர்யம் கிடைப்பதுபோல் தோன்றும். வேதம் கூருத சில தேவதைகள் சிலநாள் சென்றபின் விபரீதப் பலனையும் தரும். ஸ்மிருதி ஸ்ரீமத் ராமாயணம் மஹாபாரதம் முதலியவைகளும் அக்னி ஆராதனம் செய்தவர்களைப்பற்றி மிகவும் போற்றுகின்றன. ஸ்ரீமத் சங்கராசார்யர் முதலிய ஸமயத் தலைவர்களும்கூட (நிஷ் காம) கர்மானுஷ்டானம் செய்து க்ஞானத்தைப் பெற வேணும் என்று சொல்லியிருக்கிருர்கள். எல்லோராலும் போற்றப்பட்ட அக்னியை உபாஸிப்பது மிகவும் க்ஷேமகரமானது.

### உபாஸனை க்ரமம்.

முதலில் சரீர சுத்தி செய்துக்கொண்டு இஷ்ட தேவதாப் பிரார்த்தனை செய்து பூஸுரர்களாகிய பிராம்மணர்களிடம் நான் இந்தக் கர்மாவைச் செய்கிறேன், தாங்கள் இக்கார்யத்தைச் செய்ய எனக்கு யோக்யதை உண்டாகும்படியாக அனுக்ரஹம் பண்ணவேண்டுமென்று தக்ஷிணை தந்து ப்ரார்த்திக்க அவர்களும் ததாஸ்து என ஆமோதிப்பார்கள். இதே அநுக்ஞையாம். பிறகு விக்னேஶ்வர பூஜையை முடித்துக்கொண்டு ஸங்கல்பம் செய்துகொள்ள வேண்டும்.

எந்த இடத்தில் அக்நி ப்ரதிஷ்டை பண்ணவேணுமோ அவ்விடத்தை நன்ருகக் கொத்தி விட்டு கல் புல் செடி முதலியன இல்லாமல் களைந் தெறிந்து சமப்படுத்தி விட வேண்டுமென்பது சாஸ்த்ரமுறை. இப்போது இது செய்ய வேண்டிய க்ரமமானது, ப்ராசீ: பூர்வம் முதலிய காரிகைப் படி சுருக்கமாகச் செய்யப்படுகிறது. தென் புறம் மேற்கில் ஆரம்பித்து கிழக்காகவும் அதன் பிறகு மத்தியிலும் வடக்கிலும் ஒரு ஸமித்தால் கீறிவிட்டு பிறகு மேல் புறத்தில் தெற்கிலாரம்பித்து வடக்காகவும், பிறகு மத்தியிலும் கிழக்கிலும் முன்போல் கீறிவிட்டு அந்த சிறிய ஸமித்தை அங்கேயே வைத்து கையில் ஜலத்தை எடுத்துக்கொண்டு மூடிக்கொண்டிருக்கும் கையினுல் ( அவோக்ஷ்ய என்பதன் பொருள் ஒரு பிடி என்று சொல்கிருேமே அதுபோல் கையை நிமிர்த்தியபடியே மூடி வைத்துக் கொள்வது) ஜலத்தைத் தெளித்து அதில் கொஞ்ச ஜலம்

---

**அதிதிக்கு, காக்கைக்கேனும் அளி. இல்லையேலது விஷம்**

மிச்சப் படுத்தி வேறு பாத்ரத்தில் வைத்து விட்டு கிறின ஸமித்தை எறிந்து கையை அலம்பிவிட்டு வ்யாஹ்ருதி ப்ரணவம் என்னும் மந்த்ரங்களால் அக்னியை ப்ரதிஷ்டை செய்யவேண்டும். பிறகு முன் தெளித்த ஜலத்தின் மீதியை அக்னிக்குக் கிழக்கில் தரையில் விடவேண்டும். அக்னி கொண்டு வந்த பாத்ரத்தில் தீர்த்தம், அக்ஷதைகளைச் சிறிது போடவேண்டும். வேறு பாத்ரத்தில் கொஞ்சம் ஜலம் விட்டு அதையும் கிழக்கில் போடப்போகும் பரிஸ்தரணத்திற்கும் வெளியில் இருக்கும்படியாக வைக்கவேண்டியது. வடக்கிலும் வைக்கலாம். இப்போது எல்லோரும் கிழக்கில் தான் வைப்பார்கள்.

பிறகு அக்நியை ஊதி பலப்படுத்தவேண்டியது. அதன் பிறகு நான்கு திசைகளிலும் 16–16 வீதம் தர்ப்பங்களைப் பரப்பிவிட்டு வடக்கில் வேறு 12 தர்ப்பங்களைப் பாத்ர ஸாதனத்திற்காகவும், வேறு 12 தர்ப்பங்களை ப்ரணீதா ஸாதனத்திற்கும், அக்நிக்கும் பரிஸ்தரணத்திற்கும் மத்தியிலும், அக்நிக்குத் தெற்கே பிரும்மாவுக்காக ஆஸநத்திற்கு மூன்று தர்ப்பங்களையும் போடவேண்டும். பரிஸ்தரணம் போடுவதால் ராக்ஷஸர்கள் வரமுடியாமல் செய்யப்படுகிறது இதன்பின் எந்த கர்மா செய்கிறோமோ அதற்கேற்ற பாத்ரங்களை 4 பாத்ரமானால் தர்வீ, ஆஜ்யஸ்தாலீ இதர தர்வீ, ப்ரோக்ஷணீ. (6பாத்ரமானல் ப்ரணீதா, இத்மம் 2அதிகம்)எல்லாவற்றையும் வடக்கிலுள்ள தர்ப்பங்களில் இரட்டை இரட்டையாகக் கவிழ்த்து வைக்க வேண்டும். பிறகு இரு தர்ப்பங்களை (ஒட்டை சாண் அளவுள்ளவையும் ஸமமானவையும் அக்ரம் முறியாததாகவும் இருக்க வேண்டும்) எடுத்து பவித்ரம் செய்து கையில் வைத்துக் கொண்டபடி எல்லா பாத்ரங்களையும் தொடவேண்டியது. ப்ரோக்ஷணீ பாத்ரத்தை எடுத்து அக்ஷதைசேர்த்து அக்நிக்கு மேற்கில் தர்ப்பங்களின்மேல்வைத்து அதன்மேல் வடக்கு நுனியுள்ள பவித்ரத்தையும் வைத்து அதில் தீர்த்தம் சேர்த்து பவித்ரத்தை நிமிர்த்திய கைகளால் அடியிலும் நுனியிலும் பிடித்துக்கொண்டு மேற்கில் ஆரம்பித்து கிழக்காக மூன்று தடவை தீர்த்தத்தைத் (அம்மியில் அறைப்பது போல்) தள்ளவேண்டும். அது உத்பவனம் எனப்படும்.

பிறகு கவிழ்த்திருக்கும் எல்லா பாத்ரங்களையும் நிமிர்த்திவிட்டு பவித்ரத்துடன் சேர்ந்த கையில் தீர்த்தத்தை

---

**வடக்கு முகமாக அமர்ந்து புஜிக்காதே! கடனதிகமாகும்.**

விட்டுக்கொண்டு நிமிந்த கையினுல் எல்லா பாத்ரங்களை யும் ப்ரோக்ஷிக்கவேண்டியது. மீதி ஜலமில்லாமல் எல்லா ஜலத்திலும் மூன்றுமுறை ப்ரோக்ஷிக்கவேண்டும். பாத்ரத்தை அக்னிக்குத் தெற்கே வைத்துவிட்டு (ஷட்பாத்ரமாகுல்) ப்ரணீதா பாத்ரத்தை எடுத்து முன்போல் மேற்கில் வைத்து பவித்ரம் தீர்த்தம் உத்பவனம் எல்லாம் முன்போல் செய்து நமது மூக்குக்குச் சமமாக மேலே தூக்கி பரிஸ்தரணத்துக்கு வடக்கிலுள்ள பன்னிரண்டு தர்ப்பங்களில் வைத்து எட்டு தர்ப்பங்களால் அதை மூடிவிட வேண்டும். இம்மாதிரி வைக்கும் ப்ரணீதையை கர்மா முடியும் வரையில் அசைக்காமலும் கீழ் சிந்திவிடாமலும் ஜாக்ரதையாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். அக்ஷதையால் பூஜித்து விட்டு, அக்னிக்கு தெற்கே வடக்கு முகமாய் இருக்கும்படியாக பிராம்மணர் ஒருவரை உட்கார்த்தி வைக்க வேண்டும்.

அவரை ப்ரும்மா என்று சொல்வார்கள். அவரையும் பூஜித்துவிட்டு நெய் பாத்ரத்தை (ஆஜ்யஸ்தாலியை) எடுத்து மேற்கு தர்ப்பங்களில் பரிஸ்தரணத்துக்கு வெளியில் வைத்து அதில் வடக்கு நுனியாக பவித்ரத்தை வைத்து நெய்யை ஸ்தாலியில் சேர்த்து அதன் பிறகு அக்னியை வடபாகத்திலிருந்து மூன்றுக்குக் குறையாமல் தணல் எடுத்து அவைகளை வடக்கு பரிஸ்தரணத்துக்கு வெளியில் வைத்து அதில் ஆஜ்யஸ்தாலியை வைத்துக் காய்ச்சி ஜ்வலிக்கும் ஒரு தர்பத்தை அதன்மேல் காண்பித்து இரு தர்பங்களின் அக்ரங்களைக் கட்டை விரலின் மேல்கணு அளவுள்ளவைகளைக் கிள்ளி அலம்பிப் போட்டு மறுபடி ஒரு தர்பத்தைக் கொளுத்தி மூன்றுமுறை பிரதக்ஷிணமாகச் சுற்றி ஆஜ்யஸ்தாலியை வடக்கி லிறக்கி விட்டு, முன் எடுத்த தணல்களை மறுபடியும் அக்னியிலேயே சேர்த்துவிட்டு ஆஜ்யஸ்தாலியை எதிரில் வைத்து பவித்ரங்களால் ஆஜ்யத்தில் கிழக்கில் ஆரம்பித்து மேற்கில் கொண்டுபோய் மறுபடியும் கிழக்கில் முடிக்கவேண்டும். இதைத்தான் புநராஹாரம் என்பார்கள். இம்மாதிரி மும்முறை செய்து பவித்ரத்தை அவிழ்த்து கையை அலம்பி கிழக்கு நுனியாக இருக்கும்படி அக்னியில் சேர்த்துவிட வேண்டும்.

---

**ப்ராணுக்நிஹோத்ரம் என்பதை மரவாதே.**

ஸூர்யனை உத்கீதம் என உபாஸிக்க வேண்டும். அவர் உதயமாகி நமக்காக இருளைநீக்கி பாபத்தை அகற்றி உயரக் கிளம்புகிறார். ஸூர்யனும், ப்ராணனும் உஷ்ண முள்ளவை. இரண்டிற்கும் ஸ்வரம்—கிளம்பி செல்கிறது எனப் பெயர். ஸமமான இரண்டையும் உத்கீதமென உபாஸிக்க வேண்டும். வியாந வாயுவையும் ஸாம உத்கீதம் என உபாஸிக்க வேண்டும்.

உத்கீதம் என்ற சப்தத்தின் அக்ஷரங்களை உத்கீதமென உபாஸி. உத்—ப்ராணன். கீ—வாக்கு. தம்—அன்னம், உத்—ஆகாஶம். கீ-அந்தரிக்ஷம், தம்-பூமி, உத்-ஸூர்யன், கீ—வாயு, தம்-அக்நி. உத்-ஸாமம். கீ-யஜுர்வேதம் தம் - ரிக்வேதம்.

ரிக்கால் எதை ஸ்தோத்ரம் செய்ய உத்தேசிக்கிறானே அதை மநதால் முதலில் நினைக்கவேண்டும். ஓம் எனும் அக்ஷரத்தையே ப்ரும்மமாக உபாஸிக்கவேண்டும். தேவர்கள் ம்ருத்யுவுக்கு பயந்து வேதோக்த கர்மாக்களை அநுஷ்டித்து வேத மந்த்ரங்களால் தங்கள் உடலை மறைத்துக் கொண்டார்கள். தங்களது ஆத்மஸ்வரூபத்தையறியாமல் கர்மாக்களாலும், அதற்கு ஸாதனமான வேதமந்த்ரங்களாலும் ஆத்மாவை மறைத்துக்கொண்டதால் வேதத்திற்கு சந்தஸ் (மறைப்பது) என்று பெயர் உண்டானது. ஜலத்தில் தங்களை மறைத்துக்கொண்டிருக்கிற மீன்களைச் சம்படவர் தூண்டியால் பிடிக்கக் கருதுவதுபோல் யமன் மறைகளில் மறைந்த தேவர்களைப் பிடிக்க முயன்றான். தேவர்கள் வேதஸாரமாயும் பீஜமாயுமுள்ள ஓங்காரத்தில் மறைந்தார்கள். ஓம் என்பது அக்ஷயமாகவும் அம்ருதமாயும் அபயமாயுமிருப்பதால் அதை அடைந்த தேவர்களும் அம்ருதர்களாகவும், அபயர்களாகவும் ஆனார்கள்.

ப்ரணவமும் உத்கீதமும் ஒன்றே. அதேபோல் ப்ரணவமும் ஆதித்யனும் ஒன்றே. ஸூர்யன் ப்ரணவத்தை உச்சரித்துக்கொண்டே ஸஞ்சரிக்கிறார். -ஸூர்யனை ரச்மிகளுடன் சேர்த்து அவர் ஒருவரே என்று நான் உபாஸித்தேன். முக்ய ப்ராணனையும் மற்றவைகளையும் விட்டு தனியாக உபாஸித்தேன். அதனால் நீ ஒரே புத்ரன் எனக்குப் பிறந்தாய். நீ ஸூர்யனையும் கிரணங்களையும் வெவ்வேறாகவும், அதேபோல் முக்ய ப்ராணனையும், மற்ற

ப்ராணன்களையும் வெவ்வேருகவும் உபாஸநம்செய். உனக்கு அநேக புத்ரர் உண்டாவார் என கௌஷீதகி என்ற ரிஷி தன் புத்ரனுக்கு உபதேசித்தார். (முக்திமுக்ய பலன்—இது இடப்பயன்).

உத்கீதமும் பிரணவமும் ஒன்று என்று உபாஸித்தால் உத்காதாயாகத்தில் தவறுதல்ாக ஏதேனும் காநம் செய்திருந்தாலும்கூட யாகம் பூர்ணமான பலனைத் தரும்.

ஸாம—என்பதில் ஸ—என்றும், அம—என்றும் இரு பிரிவுகள் இருக்கின்றன அல்லவா ? அது அந்தரிக்ஷமும் வாயுவுமாம். சூர்யனும்ஸ்வர்க்கமுமாம். நக்ஷத்ரமும் சந்த்ரனுமாம். ஆதித்யனது சுக்ல காந்தி கிருஷ்ண காந்தி இரண்டும் சேர்ந்து ஸாம என்பபடும்.

ஆதித்யனுக்குள் ஹிரண்மயமான புருஷன் காணப்படுகிறன். அவனது மீசையும் ஹிரண்மயம். கேசமும் கால் கட்டைவிரல் நுணிமுதல் எல்லாம் ஒரே ஹிரண்மயமானவர் ஆவர். அவரது கண்கள் இரண்டும் குறங்குகளின் பிருஷ்டம்போல் சிவந்ததான தாமரைபோன்றவை. ஸர்வ பாபங்களிலிருந்தும் அவர் மேலே கிளம்பி இருப்பதால் அவருக்கு உத் என்று பெயர். அவரை அறிந்தவனும் பாபத்திலிருந்து விடுபடுவான்.

அவருக்கு ரிக் ஸாம இரண்டும் இரு பர்வாக்கள். அவரே உத்கீதம். உத்காதா யாகத்தில் இவரையே துதிக்கிறர். ஆதித்ய மண்டலத்திற்கு மேலுள்ள உலகங்களிலுள்ளவர்களின் இஷ்டத்தையும் மற்ற தேவர்களது இஷ்டத்தையும் நிறைவேற்றும் ஈசன் அவர்.

மனிதனது கண்ணுக்குள் காணப்படும் புருஷனே (பாப்பா) ருக், ஸாம, உக்தம், யஜுஸ், ப்ரஹ்மம் ஆகும். ஆதித்யனுக்கு உள்ள ரூபம், பர்வ, நாம, எல்லாம் இவருக்குமிருக்கின்றது.

அப்படிப்பட்ட அக்ஷிபுருஷர் தனக்குமேல் உள்ள உலகங்களுக்கும் மனுஷ்யனுடைய ஆசைக்கும் ஈமன் ஆவான். இவரையே கானம்செய்கிறர்கள். ஆதலால் அவர்கள் தன்யர்களாவார்கள். இப்படி அறிந்து கானம் செய்கின்றவன் அக்ஷிபுருஷனையும் ஆதித்ய புருஷனையும் காநம்செய்தவனக ஆவான். அதனல் மேலான லோகங்களையும் விருப்பங்களையும் அடைகிறன்.

---

**அஸ்மாகம் நித்யமஸ்து ஏதத் என்று**

# அஷ்டாவக்ர கீதை.



த்வைதத்தை மறந்து அத்வைதத்தைக் காண்கின்ற எனக்கு ஜந ஸமூஹமே காடுபோலிருக்கிறது. அதில் எனக்கு என்ன ஸந்தோஷமிருக்கிறது.

நான் என்பது தேஹம் அல்ல. எனக்கும் தேஹம் கிடையாது. நான் ஜீவனுமல்ல. சுத்த சித்ஸ்வரூபி. நான் ஜீவன். எனது இந்த உடல் என்பதனுலேயே எனக்கு பந்தம், துக்கம் என்று ஸதா நினை.

எல்லே இல்லாத நான் எனும் கடலில், மநதெனும், காற்று வீசும்போது உலகமெனும் அலேகள் உண்டாயின.

நானெனும் பெருங்கடலில் மநமெனும் காற்று ஓய்ந் தால் ஜீவனெனும் வியாபாரிக்கு ஜகத் எனும் கப்பல் அழிந்துவிடும்.

நானெனும் பெருங்கடலில் ஜீவரெனும் அலேகள் உண்டாகின்றன. மோதுகின்றன. விளேயாடுகின்றன. இயற்கையாக உள்ளே நுழைகின்றன.

**3-ம் அத்யாயம்.** ஆத்மா ஒருவனே அழியாதவன் என நிஶ்சயமாக உணர்ந்த தத்வக்ஞுநய் தீரனுக உள்ள உனக்கு பொருள் தேட புத்திவருமா ?

ஆத்மாவை நன்கு அறியாததால் விஷயங்கள் ஆநந்த மோ என அவைகளில் ஆசை உண்டாகிறது. கிளிஞ்சல் என்ற க்ஞாநமில்லாததால் அல்லவா? அதைப்பார்த்து வெள்ளி என பிரமமும் ஆசையுமுண்டாகிறது.

கடலில் தானே அலே தோன்றி கடலிலே மடிகிறது. அதேபோல் ஆத்மாவினிடமே உலகம் தோன்றி மறை கிறது. இதை அறியாமல் ஏழைபோல் ஏன் ஓடுகிருய்.

சுத்த சைதன்ய வடிவன் ஆத்மா. அதிஸுந்தரன் என்று கேட்டுங்கூட விஷயத்தில் ஆசைகொண்டு ஏன் மாலின்யமடைகிருய் ?

ஸர்வ பூதங்களிடமும் ஆத்மா இருக்கிருர். ஆத்மா வினிடம் ஸர்வ பூதங்களும் இருக்கின்றன என்று நன்கு அறிந்தவருக்குக்கூட என்னுடையது என்பது தொடர்ந் திருப்பது தான் ஆஶ்சர்யம்.

---

**நித்யம் எனக்கு இது கிடைக்கட்டும் என பொருள்.**

பரம அத்வைதத்தை உணர்ந்து அந்நிலையிலிருப்பவரும் மோக்ஷத்தில் பேரவா கொண்டவரும் வேறொன்றில் ஆசைகொண்டு ஏமார்ந்தால் அது மாயா விலாஸத்தின் லீலையேயாம்.

க்ஞாநத்திற்குப் பரம சத்ருவானது அக்ஞாநமென்று நன்கு உணர்ந்திருந்தும் மிக்க துர்பலனைப் போல் வேறொன்றை ஒருவன் விரும்பினால் அது காலத்தின் கோலமேயாம்.

இம்மை இன்பத்திலும் மறுலோக இன்பத்திலும் வைராக்யமுள்ளவன், நித்யமிது அநித்யமிது என நன்கு அறிந்தவன், மோக்ஷத்தையே விரும்புகிறவன், மோக்ஷ ஸாதநத்தைக்கண்டு பயந்தால் அது ஆர்ச்சர்யமே.

த்ருடப்ரக்ஞை உள்ள தீரன் துக்கத்தினால் பீடிக்கப் பட்டாலும் ஸதா கஷ்டத்திற்கு ஆளானாலும் ஆத்மாவையே நினைத்துக்கொண்டு துக்கப்படமாட்டான். இன்பம் வந்தாலும் களிக்கமாட்டான்.

விசால புத்தியுள்ளவன் தனது உடல் ஏதேனும் வேலை செய்தாலும், ஆத்மா நிஷ்கிரியன் என உணர்ந்து துதித்தாலும் நிந்தித்தாலும் கலங்கமாட்டான்.

தீரனான க்ஞாநி உலகமெலாம் மாயா விலாஸம் என்று எதிலும் ஆர்ச்சர்யப் படமாட்டான். மரணம் வரும் பொழுதும் பயப்படமாட்டான்.

எவன் மநதில் ஆசை லேசமில்லையோ நைராச்யம் என்பது குடிகொண்டுளதோ ஆத்மக்ஞாநத்தில் த்ருப்தி அடைந்தானோ அவனுக்கு ஸமமானவன் உலகில் எவரேனுமுண்டோ ?

ஸ்திர புத்தியுள்ள க்ஞாநி, இயற்கையாகவே காணப் படும் வஸ்துவெல்லாம் ஒன்றுமில்லை, மாயை என உணர்ந்தவன், இது வேண்டும் இது வேண்டாமென கூறுவானோ ?

மநதில் யாதொரு விருப்பமும் கோரிக்கையுமில்லாதவன் தற்செயலாக ஏதேனும் போகம் ஏற்பட்டால் துக்கமும் அடையான், ஸுகமும் அடையான்.

---

பரிமாறும் பொழுது இலையை பிடித்துக் கொள்.

பாலர் பகுதி.

# பால பாரதம்.

உத்யோக பர்வா. (ஐப்பசியீ தொடர்ச்சி)

கே: கிருஷ்ணன் என்ன உத்தேசத்துடன் கௌரவர்களுடன் ஸமாதானத்திற்கு வந்தார்?

ப: யுத்தம் நடக்கப்போவது ஸ்திரமே! என்றாலும் உலக அபவாதத்திற்கு ஆளாகக் கூடாதெனத் தூதனைப்போல் ஸமாதானம் செய்ய வந்தார்.

கே: அவரை கௌரவர்கள் வரவேற்று அவர் சொல்லைக் கேளாவிடினும் மரியாதையுடன் பூஜித்தார்களா?

ப: த்ருதராஷ்டிரன் தனியாய் இருந்தால் அதை எதிர் பார்க்கலாம்! துர்யோதநன், சகுனி, கர்ணன் முதலியவர்கள் இருக்கும்பொழுது அவரைப் பூஜிப்பதற்குப் பதிலாக அவரைக் கட்டிச் சிறையில் தள்ளுவது என முயற்சித்தனர்.

கே: பேஷ், பகவான் அவர்களிடம் சென்று தங்கினரா?

ப: அவர்களழைத்தாலும் அஹங்காரமுள்ள அவர்கள் வீட்டைவிட்டு பரமபாகவதரும் ஏழையுமான விதுரன் வீட்டிலிருந்து ஆனந்தமடைந்தார்,

கே: அங்கே என்ன ஆனந்தம்?

ப: பக்திப்பரவசனாகி பகவானுக்காகப் பழுக்க வைத்திருந்த வாழைப்பழத்தை உரித்து பழமென்று எண்ணி தோலையே பகவானுக் களித்து பழத்தைக் கீழே எறிந்தான். அவனளித்த கஞ்சியையும் அம்ருதமாகக் கருதி சாப்பிட்டார் பகவான்.

கே: மற்றவர் அரண்மனையில் பக்ஷ்யபோஜ்யங்களுடன் புசிப்பதைவிட்டு இதிலென்னஆனந்தம்பகவானுக்கு?

ப: ஒவ்வொருவரும் அஹங்காரத்துடன் 'இது என் வீடு' என் வீடு என்றனர். விதுரரோ இது தங்கள் வீடு என்றார். பக்தியிலீடுபட்டு பரவசராகி என்ன கொடுக்கிறோம் என்று தெரியாமல் தோலைக்கொடுத்தார்.

கே: ஆஹா! மெய்மறந்த பக்தி அது. பகவானைக் கட்ட முயற்சித்தார்களே அது எங்ஙனம்?

ப: விதுரருடன் ஸபைக்கு வந்து பாண்டவர்களுக்குப் பாதி ராஜ்யம் அல்லது ஐந்து கிராமத்தை யாவது

தரும்படிக் கேட்க ஊசிமுனை அளவு பூமிகூட தர முடியாது என துர்யோதனன் சொல்லைக் கேட்டு அவனது செயலையும் குணத்தையும் கண்டித்தார். உதாஹரணமாகப் பற்பல கதைகளையும் கூறினர்.

கே: துர்யோதனன் என்ன செய்தான்?

ப: அதைக் கேட்டு கோபத்தினால் ஸபையிலிருந்து வெளியே சென்றான்.

கே: பிறகு என்ன நேர்ந்தது?

ப: கிருஷ்ணன், ராஜன்! ஒரு குலத்தைக் காக்க நீ துர்யோதனனை த்யாகம் செய்வது உசிதம் என்றார்.

கே: த்ருதராஷ்டிரன் என்ன செய்தான்?

ப: காந்தாரியை சபைக்கு அழைத்துவந்து புத்ரனுக்கு ஸமாதானம் கூறும்படிச் செய்தான்.

கே: மற்ற பெரியோர்களின் சொல்லைக் கேளாத துர்யோதனன் தாய் சொல்லை மாத்ரம் கேட்பானா?

ப: அதையும் அலக்ஷியம் செய்து கர்ணன் முதலியவர்களுடன் யோசித்து அவரைக்கட்ட முடிவுசெய்தான்.

கே: பகவான் என்ன செய்தார்?

ப: உடனே பிறவிக்குருடனான த்ருதராஷ்டிரனுக்குக் கண்ணைத் தந்து தானே எங்கும் எப்போதும் எல்லாமாய் இருப்பதைக் காட்ட விச்வரூபமெடுத்தார்.

கே: ஆஹா! பாபியான துர்யோதனனை உத்தேசித்து எல்லோருக்கும் இந்த பாக்கியம் கிடைத்தது போலும்! த்ருதராஷ்டிரனுக்கு கண் பிறகு ஸ்திரமாக இருந்ததா?

ப: பகவான் தருவதாகக்கூறியும் பகவானைத் தர்சித்த கண்ணால் வேறு எவரையும் காணவேண்டாமென கண்கள் மறையும்படி வேண்டினான்.

கே: அதுவரை த்ருதராஷ்டிரன் செயல் சிறந்ததே! பகவான் பிறகு யாது செய்தார்?

ப: வரும்பொழுது கர்ணனைத் தன் ரதத்தில் ஏற்றிக் கொண்டு ரஹஸ்யமாக "நீ குந்தி புத்திரன், ஆனதால் பாண்டவர்களுடன் சேர்ந்து பகைவரைக் கொன்று பட்டாபிஷேகம் செய்துகொள்!" என்றார்.

---

ஆஹாரத்திற்கு முன் மௌனமாக இரு, பேசாதே.

கே: இது சிறந்த யுக்திதான்! ஆனால் கர்ணன் ஸமயத்தில் நண்பனைக் கைவிடுவானா?

ப: அது உண்மைதான். பல காரணங்களைச் சொல்லி பாண்டவரிடம் சேர மறுத்தான். பகவானைப் போல் குந்திதேவியும் கங்காதீரத்தில் கர்ணனைக் கண்டு முதல் புதல்வனான நீ பாண்டவருடன் சேர் என வேண்டினாள். அதையும் மறுத்தான்.

கே: பிறகு என்ன நடந்தது?

ப: தர்மராஜன் த்ருஷ்டத்யும்நனை ஸேனாதிபதியாக்கி பட்டாபிஷேகம் செய்து குருக்ஷேத்ரம் வந்து ஏழு அக்ஷௌஹிணீ ஸேனைகளை வ்யூஹமாக அமர்த்தினான். அப்படியே துர்யோதனன் பீஷ்மரை ஸேனாதிபதியாகப் பட்டாபிஷேகம் செய்து தனது பதினோறு அக்ஷௌஹிணீ ஸேனைகளை குருக்ஷேத்ரத்தில் அமைத்தான்.

கே: யுத்தம் ஆரம்பமானதா?

ப: அதற்குமுன் துர்யோதனன் உலூகன் என்பவனைத் தர்மரிடம் போர்செய்யாமலிருக்கும்படி தூதனாக அனுப்பினான். அவர் பகவான் சொற்படி தங்கள் ராஜ்யத்தைக் கொடுத்தால் யுத்தம் செய்யாமல் இருப்போம் என்றார்.

கே: பிறகு யுத்தம் ஆரம்பந்தானே?

ப: அவசரப்படாதே! துர்யோதனன் பீஷ்மரைப் பணிந்து தனக்கு அபயமளிக்கும்படி கூறி தம் ஸேனைகளிலுள்ள ரதர், அதிரதர் என்ற வீரர்களை குறிப்பிடும்படி வேண்டினார். தான், துரோணர், அச்வத்தாமா, க்ருபர் முதலியோர் அதிரதர் என்றும், பூரிச்ரவஸ், ஸோமதத்தன் முதலியோர் மஹாரதர் என்றும், க்ருதவர்மா, துர்யோதனன் முதலியவர் ஸமரதர் என்றும், கர்ணன் முதலியவர் அர்த்தரதர் என்றும் கூறினார்.

கே: கர்ணனைக் கடைசியில் தள்ளிவிட்ட பீஷ்மரிடம் அவருக்கு கோபம் வந்திருக்குமல்லவா?

ப: ஆம்! அவன் கோபம் அவன் நண்பனுக்கே அனர்த்தமாக முடிந்தது. என்னை அர்த்தரதன்

---

தேவஸவித: ப்ரஸுவ என்று பரிஷேசநம் செய்.

எனக் கூறிய பீஷ்மர் சாகும்வரை நான் போர் செய்வதில்லை! என்று ப்ரதிக்ஞை செய்தான்.

கே: பாண்டவர்களில் அங்ஙனம் வீரர்களைப்பற்றி கூற வில்லையா?

ப: நன்ருகக் கூறினர். அர்ஜுனன் ரதோதாரர் என் றும், பீமன் அஷ்டரதர் என்றும், நகுல ஸஹ தேவர்கள் மஹாரதர் என்றும் அவர்களைப்பற்றி யும் கூறினர். அன்றியும் பீஷ்மர், சிகண்டியுடன் தான் யுத்தம் செய்வதில்லை என்றும் கூறினர்.

கே: ஏன்? அதற்குக் காரணமென்ன?

ப: முற்பிறவியில் அவள் அம்பா என்ற இராஜ கன் னிகையாக இருந்து தன்னைக் கொல்லவேண்டு மென்று பல முயற்சிகள் செய்தும் பலிக்காமல் போகவே மறுபிறவியிலாவது என்னைக்கொல்வது என்று சிகிண்டியாக வந்தாள்.

கே: சிகிண்டி புருஷனல்லவா? அவள் புருஷனுகவே பிறந்தாளா?

ப: அல்ல! பெண்ணுகவே பிறந்தாள். தந்தை அவ ளுக்கு ஆண் வேஷம் தரித்து தாசார்ண தேச அரசன் மகளை மணமும் செய்துவைத்தான்.

கே: பெண்ணுக்குப் பெண்ணை மணம் செய்வது ஆச் சர்யம்! எப்படி அரசன் கன்னிகையைத் தந்தான்?

ப: ஆண்வேஷத்துடன் இருந்ததால் பெண்ணைத் தந் தான். பெண் என அறிந்தபின் போருக்கு வந்தான்.

கே: ஐயோ பாவம்! சிகிண்டினி என்ன செய்தாள்?

ப: தன்னுல் தன் தந்தைக்குத் தீங்கு வேண்டாமென கானகம் சென்று குபேரன் வேலைக்காரனுன ஸ்தூணன் என்பவனைச் சரணமடைந்தாள். அவன் தனது ஆண்மையை அவளுக்குத் தந்து தந்தையை துன்பத்திலிருந்து விடுவிக்கும்வரை தான் பெண் ணுகவே இருந்தான்.

கே: சிகிண்டினி சிகிண்டியாக மாமனரிடம் தான் ஆண் என்று காண்பித்து சந்தோஷப்படுத்தியிருப்பாள்.

ப: ஆம்! குபேரன் ஸ்தூணனைப் பார்த்துக் கோபம் கொண்டு அவனை என்றும் ஸ்த்ரீயாயிருக்கட்டும் என சபித்தார். சிகிண்டினி சிகிண்டியானுன்.

**உத்யோக பர்வா முற்றிற்று.**

---

**காயத்ரியைக் கூறி - ப்ரோக்ஷணம் செய்.**



# குருகுல வாஸம்.

பாரதகேஸரி ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

நேருக்கு நேர் குருவினிடம் வித்தைகளைக் கற்பதுடன் குருவின் ஸந்நிதி, அவருக்குப் பணிவிடை செய்தல், அவருடைய கிருபை இவைகளே ஒருவனை மஹானுக்கும் என்பதை விளக்க சில உபாக்யானங்கள்.

அயோத தௌம்யர் என்ற ரிஷிக்கு ஆருணி, உபமன்யு, பைதர் என மூன்று சிஷ்யர்கள் இருந்தனர். ஒரு நாள் குரு ஆருணியை அழைத்துத் தன் வயலில் ஜலம் அதிகம் பாயாதபடி மடையைக் கட்டி வர ஏவினார். சென்ற ஆருணி இரவு வெகுநேரமாகியும் திரும்பவில்லை. குரு கவலையுடன் 'ஆருணி, ஆருணி' என்று கூப்பிட்டுக் கொண்டு தேடினார். குருவின் குரல் கேட்டதும் ஆருணி எதிரே உடல் நடுங்க நின்றான். 'எங்கே சென்றாய்? உனக்கு என்ன நேர்ந்தது?' என்று குரு கவலையுடன் வினவினார். "தாங்கள் சொன்னபடி மடையைக் கட்ட முயன்றேன். முடியவில்லை. ஜலம் பாயும் வேகத்தில் கட்டக் கட்ட மடை உடைத்துக் கொண்டு விடுகிறது. அதனால் மடையைக் கட்டி, என் முதுகையே அதற்குத் தாங்கலாகக் கொடுத்து இங்கு உட்கார்ந்திருந்தேன். தாங்கள் கூப்பிட்டதும் ஓடி வந்து விட்டேன். மடை இப்பொழுது உடைந்து போய் விட்டது" என்றான். "குளிரையும், பசியையும் பாராமல் உன் உடலையே எனக்குப் பணிவிடை செய்ய அளித்தாய் அல்லவா! உனக்கு 'உத்தாலகன்' என்ற பட்டம் கொடுத்தேன். உன்னிடம் எல்லா வித்தைகளும் நன்கு பிரகாசிக்கும். சென்று வா" என்று அவனுக்கு குருகுல வாஸத்தினின்று விடை கொடுத்தார்.

மற்றொரு சிஷ்யன் உபமன்யுவை பசுக்கள் மேய்க்க அனுப்பினார். மாலையில் திரும்பின உபமன்யுவைப்

---

*அபிகாரம் செய்த பின் - நெய் விட்டபின்*

பார்த்து "இன்றைய ஆகாரத்திற்கு என்ன செய்தாய்?" என்று கேட்டார். "வழக்கம் போல் பிக்ஷை எடுத்துச் சாப்பிட்டேன்" என்று உபமன்யு சொன்ஞன். "பிக்ஷான்னத்தை என்னிடம் காட்டாமல் புசித்தாயே. நாளை முதல் இதைச் செய்யாதே" என்ருர் குரு. மறுநாள் உபமன்யு பசுமேய்க்கச் சென்றவன் பிக்ஷை எடுத்து குரு சொன்னதுபோல் பிக்ஷான்னத்தை அவர் முன்னிலையில் கொண்டு வைத்தான். குரு அதைத் தான் எடுத்து வைத்துக் கொண்டு உபமன்யுவை அனுப்பிவிட்டார். உபமன்யு மாலையில் திரும்பி வந்தான். பசிவாட்டமில்லாமலிருந்தான். குரு கேட்டதற்கு தான் மறுமுறை பிக்ஷை எடுத்துச் சாப்பிட்டதாக சொன்ஞன். "தவறு செய்து விட்டாய். இரண்டுதடவை பிக்ஷை எடுப்பதும்கூடாது. நாளை முதல் பிக்ஷையே எடுக்காதே" என்று உத்தரவிட்டார்.

மாலையில் உபமன்யு வந்தான். சிறிதும் களைப்பே இல்லை. குரு விசாரித்தார். "பிக்ஷை எடுக்கக்கூடாது என்றீர்கள். பசித்தது. பசுவின் பாலைக் கரந்து சாப்பிட்டேன்" என்ருன். "உபமன்யு, அது என்னுடைய பசு. என் உத்தரவில்லாமல் அதன் பாலைக் கரந்து எப்படிப் பருகலாம்? நாளை முதல் இது செய்யாதே" என்ருர். மறுநாளும் களைப்பின்றி வந்த உபமன்யு சொன்ஞன். "பாலைப் பருகலாகாது என்றீர்கள், பசித்தது பாலூட்டின கன்றுக்குட்டிகளின் வாயில் தங்கின பால் நுரைகளைச் சாப்பிட்டேன்" என்ருன். "அதுவும் தவறு. நாளை முதல் அதுவும் செய்யாதே" என்ருர்.

மறுநாள் உபமன்யு சென்ருன். திரும்பவே இல்லை. "குரு கவலை மிகுதியுடன் சிஷ்யனைத் தேடிஞர். வெகு நேரம் கழித்து அவனை ஒரு பாழுங்கிணற்றடியில் கண்டார். 'உபமன்யு' என்ன செய்கிருயடா? எழுந்துவா" என்று அன்பு ததும்ப அழைத்தார். "தங்கள்

---

பகலில் ஸத்யம் த்வர்தேந பரிஷிஞ்சாமி என

உத்தரவை மீறி பசியை அடக்க முடியாமல் எருக்கிலை களைப் பறித்துத் தின்றேன். அதன் காரம் என் கண்களை அவித்து விட்டன. குருடனுகி விட்டேன் என்று அழு தான். குரு தேற்றினுர். " குழந்தாய் நீ கற்ற வித்யை யிலிருந்து, கண் பார்வை பெறும் வேதமந்த்ரங்களைச் சொல். அச்வினீ தேவர்களைக் குறித்த அந்த மந்த்ரம் உனக்கு ஞாபகம் இருக்கிறதா ? " என்ருர். உடனே உபமன்யு வேத மந்த்ரங்களால் அச்வினீ தேவர்களைத் துதித்தான்.

அச்வினீ தேவர்கள் (தேவலோக வைத்யர்கள்) எதிரே வந்தனர். " உபமன்யு, இந்த பக்ஷணத்தைச் சாப்பிடு, கண் தெரியும் " என்றனர். உபமன்யு நடுங்கி " குரு உத்தரவை மீறி புசித்ததனுல் இந்த கதி அடைந் தேன். இனி அது செய்யேன் " என்று மறுத்து விட் டான். அச்வினீ தேவர்கள் இன்னும் பரீக்ஷிக்க (வைத் யர்கள் அல்லவா!) எண்ணினுர்கள். " குழந்தாய், இதில் தோஷம் வராது. உன் குருவே, சின்ன வயதில் தன் குருவுக்குத் தெரியாமல் புசித்திருக்கிருர். இதை நீ சாப்பிடு. கண் பெறுவாய் " என்ருர்கள். உபமன்யு சிறிதும் இசையவில்லை. தேவர்கள் அவன் உறுதியைக் கண்டு உவந்து கண் பார்வை அளித்ததுடன் ஸகல வித்யா பலனையும் அருள் செய்தார்கள். குரு அனைத் தையும் அறிந்து ஆமோதித்து விடை கொடுத்தார்.

மூன்ருவதான பைதன் வெகுகாலம் குருவுக்கு உட லால் உழைத்துப் பலவிதமாகப் பாடுபட்டுப் பணிவிடை கள் புரிந்தான். வயதும் ஆகிவிட்டது. உடலும் மெலிந்து விட்டது. ஆனுலும் ஊக்கம் குன்ருமல் பணி விடை புரியும் பைதனை " ஸர்வக்ஞனுக " அனுக்ர ஹம் செய்து விடை கொடுத்தார்.

பைதருடைய பிற்கால சிஷ்யர்கள் மூவர். ஜன மேஜயன், பௌஷ்யன் இவர்கள் அரசகுலத்தைச் சார்ந்

---

*இரவில் ரிதந்த்வா ஸத்யேந பரிஷிஞ்சாமி என*

# உபமன்யு பக்த விலாஸம். ( பக்தர் சரிதம்.



சுந்தரமூர்த்தி நாயனர் சரிதம். (ஐப்பசியின் தொடர்ச்சி.)

சுந்தரர் அடியார்கள் கூட்டத்துடன் திருவொற்றியூர் எல்லையைத் தாண்டியவுடன் சிருங்கலாவைப் பிரிவது இல்லை என்ற ஸத்யத்தை மீறியதால் இருகண்களும் அவிந்தன.

கோஷ்டியுடன் திருமுல்லைவாயல் என்ற க்ஷேத்திரத்திற்கு வந்து பகவானைப் பாடினர். பகவான் சுந்தரருக்கு ஒரு ஊன்றுகோலைத் தந்தார். ஒவ்வொரு ஊராகக் கடந்து காஞ்சி ஏகாம்பர நாதனைப் பாடினர். அவர் இடது கண்ணை மாத்ரம் அளித்தார். மேலே ஒவ்வொரு க்ஷேத்ரமாகச்செல்ல உடலில் சர்மநோயும் உண்டாயிற்று. பகவானை அவர் துதிக்க ஸ்ரீ திருத - திருத்துருத்தி என்ற க்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தத்தில் ஸ்நாணம் செய் என பகவான் கூறினர். அதில்நீராடி உடல் நோயை அகற்றிக் கொண்டார். திருவாரூர் சென்று சிவனைப்பாட வலது கண்ணும் வந்தது. புருஷனை விட்டு பிரிந்திருந்த பறவையார் அவர் சங்கலியை மணந்ததைக் கேட்டு மிக்க வருந்தி அவர் தன் வீடு வரும்போது பிரண்ய கலஹத்தால் கதவைத் தாளிட்டாள். சுந்தரர் மிக்க வருத்தத்துடன் திரும்பிவந்து பகவானிடம் முறையிட்டார். பகவானும் பிராம்மண வடிவந்தாங்கி நடு இரவில் பறவையார் வீடு சென்று ஸமாதானம் செய்தார்.

"அவர் சிருங்கலையிடம் ஸத்யம் செய்தவர். என்னை மறந்தவர். அவர் இங்குவர வேண்டாமென" மறுத்தாள் அவள். மறுபடியும்பகவான் சுந்தரரிடம் இதைக் கூற ஸ்வாமி உம்மாலாகாத காரியமுண்டோ? தயை புரியவேண்டு மென வேண்டினர். பகவான் மறுபடியும் அவள் வீட்டிற்குச் சென்று பல நல் மொழிகளைக் கூறி இருவரும் முன்போலவே சேர்ந்து வாழ்ந்து அடியார் தொண்டில் ஈடுபடும்படிச் செய்தார்.

### கலிக்காமரின் கறைகடந்த பக்தி.

சுந்தரமூர்த்தி ஸ்வாமி, தனது "மனைவியிடம் பகவானைத் தூதனுக அனுப்பினர்" என்று கேள்விப்பட்டு கலிக்காமர் சுந்தரர்மீதுகடும் கோபம் கொண்டார். மிகத் தாழ்வான வேலையில் பகவானை ஏவியதற்குசுந்தரரும்

மிக்க மநம்நொந்து வருந்திஞர். பகவான் இருவருக்கும் நட்பை உண்டுபண்ண திருப்பங்கூரில், சிறந்த திருப்பணிசெய்து சிவபக்தரான திருமங்கலம் கலிக்காமருக்கு கடுமையான சூலே நோயை உண்டுபண்ணிஞர். அவர் நோயின் துன்பம் தாளாமல் வருந்தி சிவனே வேண்டிஞர். சிவன், சுந்தரமூர்த்தியிஞல் நோய் அகலும் என்று கூறி அவருக்கும் ஸ்வப்னத்தில் "கலிக்காமரின் நோயை அகற்றிவா" எனக்கூறிஞர். கலிக்காமர் சிவாபசாரம் செய்த சுந்தரரைப் பார்க்கவும் விரும்பாமல் அவர் வருவதற்குள் கத்தியால்வெட்டிக்கொண்டு இறந்தார். இதைக் கண்ட அவர் மனேவியும் இறக்கப் போவதைக் கேட்டு ஸுந்தரர் தன்னே வெட்டிக்கொள்ள முயற்சித்தார். உடனே பகவான் ப்ரத்யக்ஷமாகி கலிக்காமரை எழுப்பி இருவருக்கும் நட்பை உண்டாக்கிஞர்

### சேரமான் நட்பு.

சேர நாட்டிலே சிவபக்தியில் சிறந்த கவி "சேரமான்பெருமான்" என ஓர் சிவபக்த சிகாமணி இருந்தார். அவரது பக்தி பாட்டுகளேக் கேட்போர் மெய் மறப்பர். அவர் ப்ரதிதினம் சிவ தாண்டவத்தில் சிவன் கால் சிலம்பின் சப்தத்தைக் கேட்டு ஆனந்திப்பது வழக்கம். ஒருநாள் அவ்வொலி கேளாமல் போகவே தான் வாழ விருப்பமின்றி கத்தியால் தன்னே வெட்டிக் கொள்ளமுயன்ருர். உடனே "சிலம்பு ஒலியும், பக்தன் ஸுந்தரனது பாடலில் ஈடுபட்டிருந்ததால் தாமதம் ஆனது" என்ற சொல்லும் செவியில் விழுந்தது. அத்தகைய பக்தனேக்காணவேணுமென திருவாரூருக்குச்சென்ருர். அன்றுமுதல்இருவரும் சிறந்த தோழராயினர்.

### பாண்டியநாடு செல்லுதல்

இருவரும் சேர்ந்து சிவ பக்தியில் ஈடுபட்டு, பாண்டியநாடு சென்றனர். பாண்டிய மன்னன் இவர்களே வரவேற்று பூஜிக்கஎல்லோரும் சேர்ந்து ஒவ்வொரு க்ஷேத்ரமாகச் சென்று தர்சித்துப் பாடல்பாடி, சேரப் பெருமான் அழைப்புக் கிணங்கி சேரநாட்டிற்குச்சென்றனர். வழியிலுள்ள காவேரி ப்ரவாஹம் கறை புரண்டு ஓடவே, சுந்தரமூர்த்தி ஒரு பாட்டு பாடிஞர். ப்ரவாஹம் நின்று உடனே வழிவிட, எல்லோரும் ஸந்தோஷித்து சேரநாடு வந்து சேர்ந்தனர். சேரன் சுந்தரரை யானேமீது

---

ஏற்றி நகர ஊர்வலம் வந்து கௌரவித்தார். அங்கு பல க்ஷேத்திரங்களைத் தரிசித்துப் பாடி சேரர் அளித்த நிதியை எடுத்து வரும் பொழுது "திருமுருகன் பூண்டி" ஸ்கந்தபுரம் என்றவிடத்தில் பகவான் பூத கணங்களை வேடர்களாக்கி அப்பொருள்களை அபகரித்தார். இதையறிந்த ஸுந்தரர் ஒரு பாடல்பாட முன்னிலும் சிறந்த தனங்களை அளித்தார் பகவான். அத்துடன் திருவாரூர் வந்தார்.

### முதலை விழுங்கிய பாலனை எழுப்பல்.

ஸுந்தரர் மறுபடியும் சோழனுடன் சேரனைக் காண வரும்போது கொங்கு நாட்டிலே ஒரு வீதியில் எதிர்க்கு எதிராக உள்ள வீடுகளில் ஒரு வீட்டில் அழுகை சப்தமும் ஒரு வீட்டில் மேள சப்தமும் அழுகையும் கேட்டு இது என்ன? என்று விசாரித்தார். தோழர்களாயிருந்த இரு சிறுவர்களை நீராடச் சென்றபோது ஒருவனை முதலை தின்றது. மற்றவன் கரையேறி வந்தான். அவனுக்கு உபனயனம் நடக்கிறது. மற்றவன் மரித்ததால் அங்கு அழுகை என்று கூற, கருணை கொண்ட சுந்தரர் ஒரு பாட்டைப்பாடி இறந்த சிறுவனை எழுப்பினார். ஒரு நாள் இல்லறத்தில் வெறுப்பு கொண்டு சுந்தரர் கைலை செல்ல விரும்பினார். பகவானிதை அறிந்து வெள்ளை யானையை அனுப்பி அதன் மீதேறி கைலாயத்திற்கு அழைத்துவரச் சொன்னார். அதை யறிந்த சேரமான் பெருமான் தன்குதிரையின் காதிலே பஞ்சாக்ஷரியையுபதேசித்து அக் குதிரையின் மீதேறி கைலாஸம்சென்றார். அக் குதிரை சுந்தரர் ஏறிய யானையை வலம்வந்து முன்னே சென்றது. கைலாஸத்தில் வாயல் காப்போர் ஸுந்தரரை மாத்திரம் உள்ளே விட்டு சேரனைத் தடுத்தார்கள். சிவனை வணங்கி ஸுந்தரர் அவரென் நண்பர் வாயிலில் நிற்கிறாரென கூறினார். சிவன் அவரையும் அழைத்து, நான் அழைப்பதற்குள் ஏன் முன்னே வந்தாய்? என்றுகேழ்க்க, சுந்தரரை விட்டுப்பிரிய மனமில்லாமல் வந்தேன் என்றார். இருவர்களையும் சிவ கணத் தலைவராக்கினார். பறவையாரும் சங்கலியாரும் மானிட உடலை விட்டு கமலினீ அநிந்திதா என்ற பழைய ரூபத்தைப் பெற்று கைலாஸம் சென்று உமையவளை முன்போல் ஆராதித்தனர். பகவான் பக்த பராதீநன்.

சுந்தரர் சரிதம் முற்றிற்று.

---

**முதலில் அமிருதோபஸ்தரணமஸி என நீர் அருந்து**

# ரஹஸ்யத்தின் ரஹஸ்யம்!!

## "அக்ஷய பரணி"

பெரிய உத்தியோகங்களுக்கான தேர்வு நடந்து கொண்டிருக்கிறது; அதிகாரிகளின் முன் ஒரு இளைஞன் வந்து நிற்கிறான்.

கேள்வி: நீ பட்டம் பெற்ற சர்வகலாசாலை எங்கு இருக்கிறது?

பதில்: சிதம்பரத்தில்.

கேள்வி: சிதம்பரமா! 'சிதம்பர ரஹஸ்யம்' என்று சொல்வார்களே, அது என்ன தெரியுமா உனக்கு?

பகீரென்றது இளைஞனுக்கு; ஆங்கிலப் படிப்புக்காகச் சிதம்பரம் சென்றவன் அங்கு 'பாம்பும், புலியும் பார்த்துப் பயிரிட்ட' பரதத்துவத்தை என்ன கண்டான்! அசட்டுத் தைர்யத்தில் 'தெரியும்' என்று சொல்லி விட்டான்.

கேள்வி: எங்கே! அது என்ன சொல் பார்க்கலாம்!

ஒரு நிமிஷம் நிதானித்தான்; சமாளித்துவிட்டான்.

இளைஞன்: எனக்குத் தெரியும்; இருந்தாலும் அது ரஹஸ்யமாயிற்றே! நான் எப்படிச் சொல்வது?

சாதுர்யமான பதில் சொல்லி வெற்றியடைந்தான் இளைஞன்; அதிகாரிகளுக்குத் தான் தோல்வி. அவர்கள் கேட்ட கேள்விக்குப் பதில் கிடைக்க வில்லையே!

### ஏ, ராஜன்!

இளைஞனின் பதிலில் ஒன்று தெளிவாகிறது. **சொல்லி விட்டால்** ரஹஸ்யம் ரஹஸ்யமாய் இருக்காது என்பது தான் அது. ஆனால் **"சொன்னாலும் ரஹஸ்யம் ரஹஸ்யம் தான்"** என்று நமது முன்னோர்களும் மஹரிஷிகளும் சொல்கிறார்கள். எங்கே என்று கேட்கிறீர்களா? ஸ்ரீமத் பாகவதம், தேவீ பாகவதம் இதர புராணங்கள் யாவற்றிலும் அடிக்கடி பின்வரும் வாக்கியங்கள் வருகின்றன.

'ஏ, ராஜன்! நான் இப்போது சொல்லப் போவது பரமகுஹ்யமான தத்துவம்; மிகவும் ரஹஸ்யமானது; இதைப் பூர்வம் சாக்ஷாத் பசுபதி உமைக்குச் சொன்னார். உமை விஷ்ணுவுக்கும், அவர் ஸூர்யனுக்கும்......... இப்படிப் பரம்பரையாகச் சொல்லி வந்த பவித்ரமான

---

*பிராணாயஸ்வாஹா என முதலில் வாயில் போடு.*

இந்த ரஹஸ்யத்தை உனக்குச் சொல்கிறேன்!'

ஆத்ம தத்துவத்தையோ, பகவத் தத்துவத்தையோ உபதேசிக்கும் போது இப்படியொரு பூர்வ பீடிகை போட்டுக் கொண்டு தான் ஆரம்பிப்பார்கள்.

ஒருவரல்ல; இருவரல்ல; அடுக்காக இத்தனை பேர் சொல்லி விட்டார்களாம்! ஆனாலும் அவை ரஹஸ்யமாம்! என்ன முரண்பாடு பாருங்கள்!

'ஒரு சமயத்தில் ஒருவர் ஒரே ஒருவருக்கு மாத்திரம் சொல்வது ரஹஸ்யமாகும்!' என்று ஆங்கிலத்திலே கேலியாகச் சொல்வது உண்டு. அப்படிக்கூட இல்லையே நாம் இப்போது ஆராயும் ரஹஸ்யம். ஒருவருக்கு ஒருவர் சொன்னதோடில்லாமல் ஏட்டிலேற்றி விட்டு நாடறிய, உலகறியச் செய்து விட்டார்களே நமது மஹரிஷிகள்! ஒரு வேளை இப்படியிருக்குமோ?

## குறுக்கு வழி.

சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்னால் மெட்ரிகுலேஷன் (Matriculation) பரீக்ஷை நெருங்கும் சமயம் கீழ்க்கண்ட விளம்பரம், வடநாட்டின் ஒரு மூலையில் உள்ள நகரத்திலிருந்து எல்லாப் பத்திரிகைகளிலும் வெளி வந்ததாம்.

"பரீக்ஷையில் நிச்சயமாக வெற்றிபெற ஒரு ரஹஸ்யம் எம்மிடம் உள்ளது; ஒரு ரூபாய் மணியார்டர் செய்தால் தெரிவிப்போம்!"

விளம்பரத்தைப் பார்த்த ஆயிரமாயிரம் மாணுக்கர்கள் பணத்தை அனுப்பி, பதிலுக்குத் தவம் கிடந்தார்கள். பரீக்ஷக்கு இரண்டு நாட்களுக்கு முன்னர் எல்லோருக்கும் ஒரேகாலத்தில் பதில் வந்தது. அதில் என்ன எழுதியிருந்தது தெரியுமா?

"உழைத்துப்படி; ஆண்டவன் இருக்கிருர்; வெற்றி நிச்சயம்!"

இப்படி ரஹஸ்யம் என்று சொன்னுல்தான் ஊக்கத்தோடு கேட்பார்கள் என்று ப்ரசாரத்திற்காக நமது நூல்களிலே எழுதிவிட்டார்களா? இருக்க முடியாது! பரம ஞானிகளான நமது முன்னேர்கள் கீழ்த்தரமான யுக்திகளைக் கையாளவே மாட்டார்கள்; அது அவர்களுக்கு அவசியமும் இல்லை.

## கொட்டை எழுத்துக்கள்.

பின் இந்தக் குழப்பத்திற்குப் பரிகாரம் கிடையாதா?

உண்டு! சிறியதொரு உபமானத்தின் வாயிலாக இவ்வரிய விஷயத்தைத் தனது கதா காலக்ஷேபம் ஒன்றில் வெகு சுலபமாகத் தெளிய வைத்தார் பாரதகேஸரி ஸ்ரீ சாஸ்த்ரிகளவர்கள்.

ஜன நெருக்கடி அதிகமாயுள்ள நகரமொன்றில் ஒரு நாள் காலை மக்களிடையே பலத்த பரபரப்பு. காரணம்? நாற்சந்தி மூலைகளில் எல்லாம் இரவோடு இரவாக யாரோ பெரும் பலகைகளைத் தொங்கவிட்டு அதில் கொட்டை எழுத்துக்களில் ஏதேதோ எழுதியிருக்கிறார்கள். அதில் அதிசயம் என்னவென்றால் எல்லோர் கண்களிலும் படும்படியான அந்த எழுத்துக்களை யாருமே வாசிக்க முடியவில்லை! அந்தப் பிரதேசத்திலுள்ள பன்மொழிப் புலவர்களாலும் கூட அறிந்து கொள்ள முடியாத ஒரு நூதன பாஷையிலே எழுதப்பட்டிருக்கிறது! என்ன விந்தை! பட்டப்பகலிலே, பெரும் பலகைகளிலே, கொட்டை எழுத்துக்களிலே எழுதப் பட்டிருந்தாலும் அதிலுள்ள விஷயம் என்ன என்பது அவ்வூர் மக்களுக்கு ரஹஸ்யமாகவே இருந்ததாம்! பல வருஷங்கள் கழித்து வெளி நாட்டிலிருந்து வந்த சாதாரண மனிதர் ஒருவர் அரை நொடியில் எழுதியிருப்பதை வாசித்து, விஷயத்தை அம்பலமாக்கி விட்டாராம்! அவருக்கு அம்மொழிதான் தாய் மொழியாம்!

அதைப் போல், ஆத்மாவைப் பற்றியோ, ப்ரும்ம தத்துவத்தைப் பற்றியோ எத்தனை பேர்களிடம் கேட்டாலும் எத்தனை நூல்களில் வாசித்தாலும், நாம் உண்மையாகத் தெரிந்து கொண்டவர்கள் ஆக மாட்டோம். ஸ்வானுபவம் ஒன்றினால் தான் உணர்ந்து அறிய வேண்டிய அவ்விஷயங்கள், வெளியூர்க்காரர் வரும்வரை பலகையில் கண்ட எழுத்துகள் எப்படிப் பல வருஷங்களுக்கு ரஹஸ்யமாகவே இருந்தனவோ, அதைப் போல் அனுபூதிமான்களின் நிலையை நாம் அடையும் வரை, பலயுகங்களானாலும், பல ஜன்மங்களானாலும் நம்மைப் பொறுத்தவரை பரம ரஹஸ்யம் தான்.

ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கினால் நம் உள்ளிலிருந்து வெளி வருவார் அந்தப் பொல்லாத வெளியூர்க்காரர்!



3. வ்யானாயஸ்வாஹா 4. உதானாயஸ்வாஹா

# ஸ்ரீ பஞ்சாயுத ஸ்தோத்ரம்.

[இதை நித்யம் காலையில் ஸ்தோத்ரம் செய்தால் பயம், கஷ்டம், பாபமிவை அகலும். சுகமுண்டாகும்.]

1. विष्णोर्मुखोत्थानिलपूरितस्य यस्य ध्वनिर्दानवदर्पहन्ता ।
तं पाञ्चजन्यं शशिबिम्बशुभ्रं शङ्खं सदा शरणमहं प्रपद्ये ॥

விஷ்ணோர் முகோத்தாநில பூரிதஸ்ய
யஸ்ய த்வநிர் தாநவ தர்ப்பஹந்தா ।
தம் பாஞ்ச ஜன்யம் ஶஶி பிம்ப ஶுப்ரம்
ஶங்கம் ஸதா ஶரண மஹம் ப்ரபத்யே ॥

**विष्णोः** - மஹாவிஷ்ணுவினுடைய **मुखोत्थानिलपूरितस्य** முகத்திலிருந்து உண்டான காற்றினால் நிறைக்கப்பட்ட தான **यस्य** - எந்தசங்கத்தினுடைய **ध्वनिः** - சப்தமானது **दानव-दर्पहन्ता** - அஸுரர்களுடைய அஹங்காரத்தை நாசம்செய்கின்றதோ **शशि बिंबशुभ्रम्** -சந்திர பிம்பம்போல் வெளுப்பாயும் **पाञ्चजन्यम्** - பாஞ்சஜன்யமெனும் பெயருள்ளதுமான **तम्** - அந்த **शङ्खम्** சங்கத்தை **अहम्** - நான் **सदा** - எப்பொழுதும் **शरणम्** - சரணமாக **प्रपद्ये** - அடைகிறேன்.

2. स्फुरत्सहस्रारमरातिनिघ्नं सुदर्शनं कोटिदिवाकराभम् ।
सुरद्विषाम् प्राणविनाशदक्षं चक्रं सदा शरणमहं प्रपद्ये ॥

ஸ்புரத் ஸஹஸ்ரார மராதிநிக்நம்
ஸுதர்ஶநம் கோடி திவாகராபம் ।
ஸுரத்விஷாம் ப்ராண விநாஶ தக்ஷம்
சக்ரம் ஸதா ஶரணமஹம் ப்ரபத்யே ॥

**स्फुरत्सहस्रारम्** - பிரகாசிக்கின்ற எண்ணிறந்த சிகைகளோடு கூடியதும் **अरातिनिघ्नं** - சத்ருக்களைக் கொல்வதும் **कोटि दिवाकराभम्** - கோடிஸூர்யர் போல காந்தியுள்ளதும் **सुरद्विषां** - அஸுரர்களுடைய **प्राणविनाश-दक्षं** - பிராணன்களை நாசம் செய்வதில் திறமை வாய்ந்

5. ஸமாநாயஸ்வாஹா 6. பிரும்மணேஸ்வாஹா

தரும் **सुदर्शनम्** - ஸுதர்சனமெனும் **चक्रम्** - சக்ரத்தை **सदा** - எப்பொழுதும் **अहम्** - நான் **शरणम्** சரணமாக **प्रपद्ये** - அடைகிறேன்.

3. यत्ज्या निनाद श्रवणात्सुराणां चेतांसि निर्मुक्तभयानि सद्यः ।
भवन्ति दैत्याशनिबाणवर्षि शार्ङ्गं सदा शरणमहं प्रपद्ये ॥

யத்ஜ்யா நிநாத ஶ்ரவணாத் ஸுராணாம்
சேதாம்ஸி நிர்முக்த பயாநி ஸத்ய: ।
பவந்தி தைத்யாஶநி பாணவர்ஷி
**ஶார்ங்கம்** ஸதா ஶரணமஹம் ப்ரபத்யே ॥

**यत्ज्या निनाद श्रवणात्** - எந்த நாண் கயிற்றின் ஒலியைக் கேட்ட மாத்திரத்தில் **सुराणाम्** - தேவர்களுடைய **चेतांसि** - மநஸுகள் **सद्यः** - அப்பொழுதே **निर्मुक्त-भयानि**- விடப்பட்டபயத்தை உடையவைகளாக **भवन्ति** - இருக்கின்றனவோ **दैत्याशनि-बाणवर्षि** - அஸுரர்கள் இடத்தில் வஜ்ரம் போலுள்ள பாணங்களைப் பொழிகின்ற **शार्ङ्गम्** - சார்ங்கம் எனும் பெயருள்ள தநுஸை **अहम्** - நான் **सदा** - எப்பொழுதும் **शरणम्** - சரணமாக **प्रपद्ये** - அடைகிறேன்.

4. रक्षोऽसुराणां कठिनोग्रकण्ठच्छेदक्षरच्छोणितरक्तधारम् ।
श्रीनन्दकं नाम हरेः प्रधानं खड्गं सदा शरणमहं प्रपद्ये ॥

ரக்ஷோஸுராணாம் கடிநோக்ர கண்ட
சேத க்ஷரச்சோணித ரக்த தாரம் ।
**ஸ்ரீ நந்தகம்** நாம ஹரே: ப்ரதானம்
**கட்கம்** ஸதா ஶரணமஹம் ப்ரபத்யே ॥

**रक्षोऽसुराणाम्** - ராக்ஷஸர்களுடையவும் அஸுரர்களுடையவும் **कठिनोग्र-कण्ठच्छेद-क्षर-च्छोणित रक्त धारम्** - வலிவுள்ளதும் பயங்கரமானதுமான கழுத்தைப் பிளந்ததனால் பெருக்கெடுத்தோடுகின்ற ரத்தத்தால் சிவந்த கூறிய முனையையுடையதும் **श्रीनन्दकं नाम** - ஸ்ரீ நந்தகம் எனப் பெயர்கொண்ட **हरेः** - மஹாவிஷ்ணுவினுடைய

---

**ப்ராணாக்னி ஹோத்ரமிது. இதில் ஆறுஹோமங்கள்.**

**प्रधानम्** – முக்கியமாயிருக்கிற **खड्गम्** – கத்தி ஆயுதத்தை **अहम्** – நான் **सदा** எப்பொழுதும் **शरणम्** – சரணமாக **प्रपद्ये** – அடைகிறேன்.

5. **हिरण्मयीं मेरुसमानसारां कौमोदकीं दैत्यपुरोपहन्त्रीम् ।**
**वैकुण्ठवासाग्रकराम्बुजस्थां गदां सदा शरणमहं प्रपद्ये ॥**

ஹிரண்மயீம் மேருஸமாந ஸாராம்
கௌமோதகீம் தைத்ய புரோபஹந்த்ரீம் ।
வைகுண்ட வாஸாக்ர கராம் புஜஸ்தாம்
கதாம் ஸதா ஶரணமஹம் ப்ரபத்யே ॥

**हिरण्मयीं** ஸ்வர்ணமயமாயும் **मेरु समान साराम्** – மேரு பர்வதத்திற்கு ஸமானமான பலத்தையுடையதும் **दैत्य पुरो पहन्त्रीम्** – அஸுரர்களுடைய பட்டணங்களை நாசம் செய்வதும் **वैकुण्ठ वासाग्रकराम्बुजस्थाम्** – மஹாவிஷ்ணு வினுடைய கையில் இருப்பதுமான **कौमोदकीम्** – கௌ மோதகீ என்னும் பெயருள்ள **गदाम्** – கதாயுதத்தை **अहम्** – நான் **सदा** – எப்பொழுதும் **शरणम्** – சரணம **प्रपद्ये** – அடைகிறேன்.

6. **इदं हरेः पञ्चमहायुधानां स्तवं पठेद्योऽनुदिनं प्रभाते ।**
**समस्तदुर्गाणि भयानि तस्य पापानि नश्यन्ति सुखानिसन्ति ॥**

இதம் ஹரே: பஞ்சமஹாயுதாநாம்
ஸ்தவம் படேத் யோநுதிநம் ப்ரபாதே ।
ஸமஸ்த துர்காணி பயாநி தஸ்ய
பாபாநி நஶ்யந்தி ஸுகாநி ஸந்தி ॥

**यः** – எவனொருவன் **हरेः** –மஹா விஷ்ணுவினுடைய **पञ्चमहायुधानाम्** ஐந்து பெரிய ஆயுதங்களுடைய **इदम्** – இந்த **स्तवम्** – ஸ்தோத்திரத்தை **अनुदिनम्** - தினந்தோறும் **प्रभाते** – விடியற்காலையில் **पठेत्** – படிக்கிறானோ **तस्य** – அவனுடைய **समस्त दुर्गाणि** - ஸகலவிதமான ஆபத்துகளும் **भयानि** – பயங்களும் **पापानि** – பாபங்களும் **नश्यन्ति** – நாசமடைகின்றன. **सुखानि** – ஸுகங்கள் **सन्ति** - உண்டாகின்றன.

---

**ப்ராணபானுதிகளுடன்கூட பகவான் உள்ளே இருக்கிறார்.**

# எது உபநிஷத் ?

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

**கேள்வி:** "தியாகோபநிஷத்" என்ற தலைப்பின்கீழ் எழுதுகிறீரே, இந்த உபநிஷத் எங்கிருக்கிறது? இது எந்த வேதத்தைச் சேர்ந்தது? எந்த ரிஷி வாக்யம் ஐயா? இப்படி 'திடீர், திடீர்' என்று உபநிஷத்துகள் தோன்றினால், அநாதியான ச்ருதி வாக்யங்களுக்கு என்ன மதிப்பு? இது வைதிகர்களின் அனுஷ்டானத்திற்கு விரோதம் அல்லவா?

**பதில்:** திருவையாற்றில் விளங்கின ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகளின் பக்திப் பெருக்கால் ஏற்பட்ட ஸ்வானுபவ வாக்யங்களே அவருடைய கிருதிகள். மஹா பண்டிதர்களும், ஸுசீலர்களுமான அவருடைய சிஷ்யர்கள் இந்த கிருதிகளில் உள்ளடங்கின விஷயங்களின் மேன்மையை அனுபவித்து, உபநிஷத் ஸாரமாக விளங்குவதால், பக்தியுடன் ஸ்வாமிகளின் கிருதிகளை 'தியாகோபநிஷத்' என்று வழங்கி வந்தனர். ஸ்வாமிகள் எந்த நிலையில் இந்த கிருதிகளை அமைத்தார் என்பதை அவரே சொல்லக் கேட்போம்.

ராகம்—அஸாவேரி] **பல்லவி.** [தாளம்—ஆதி

ஏபனிகோ ஜன்மிஞ்சிதி னனி
நீ வெந்த்ஸ வலது ஸ்ரீ ராமா நேனு — (ஏ)

**அநுபல்லவி.**

ஸ்ரீ பதி ஸ்ரீ ராம சந்த்ரா நீ
சித்தானிகி தெலியதா நேனு — (ஏ)

**சரணம்.**

வால்மீகாதி முனுலு நருலு நின்னு
வர்ணிஞ்சிரி நாயாச தீருனு
மேல்மியை உண்டு ஸத்பக்துலு
மெத்ஸுதுரே த்யாக ராஜனுத நேனு — (ஏ)

**பொருள்:—**

**பல்லவி:** எந்த காரியத்திற்காக இந்த ஜன்மம் நான் எடுத்தேன் என்று ஸ்ரீ ராமா நீ எண்ண வேண்டாம்.

---

நாம் உண்ணும் உணவை ஜீர்ணம் செய்கிறார்

**அனுபல்லவி:** ஸ்ரீபதியான ஸ்ரீ ராமசந்திரா உன சித்தத்திற்கு இது தெரியாததில்லை.

**சரணம்:** வால்மீகி முதலான ரிஷிகள் பலரும் (பிற்காலத்து பக்தியுள்ள) மனிதர்களும் உன்னை வர்ணித்திருக்கிறார்கள். அதனால் என் ஆசை தீருமா? மேன்மை உள்ள ஸத் பக்தர்கள் மெச்சுவார்களே! தியாகராஜனால் ஸ்துதிக்கப்படுகிற ராமா (தெரிவிக்க வேண்டும்.)

**கருத்து:** இந்த கீர்த்தனத்தின் பதவுரையைப் பார்க்கிறபொழுது ஒன்றும் விளக்கமாகத் தெரியவில்லை. இது தான் இவருடைய வாக்யங்களின் சிறப்பான அம்சம். இதற்கு தற்கால திருஷ்டாந்தம் ஒன்று தோன்றுகிறது. டெலிபோனில் பேசுகிறார் ஒருவர். அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறார் அவர் நண்பர். அவருக்கு, மற்றொரு கோடியில் இருந்து அந்த டெலிபோனில் என்ன பதில் வருகிறது என்று கேட்காது. ஆனால் முதலில் பேசினவருடைய வார்த்தைகளைக்கொண்டு என்ன விஷயம் பேசப்பட்டது என்று ஒருவாறு ஊகிக்கலாம் அல்லவா?

ஸ்ரீ ராமபிரானோடு தான் ஸல்லாபம் செய்த விஷயத்தையே ஒவ்வொரு கிருதியிலும் அமைத்திருக்கிறார். அவர் பகவானுடன் ஸல்லாபம் செய்த ஒரு பகுதியைத் தான் நாம் தெரிந்துகொள்ள முடிகிறது. இந்த ஊஹத்தையே நாம் கையாண்டு, இந்தக் கீர்த்தனத்தின் முழுமையையும் அனுபவிக்கப் பார்க்கலாம்.

**ஸ்ரீஸ்வாமிகள்:** ஸ்ரீபதி ஸ்ரீராமசந்திரா இந்த ஜன்மம் ஏன் எனக்கு வந்தது?

**ஸ்ரீராமபிரான்:** இந்த ஜன்மம் உயர்ந்ததுதானே தியாகராஜா! இதில் உனக்கு என்ன வருத்தம்?

**ஸ்வா:** உம்மருளால் மேன்மையான பிறப்பும், புத்தியும், பக்தியும் பெற்றேன். உமக்கென்ற ஒரு நற்கைங்கரியமும் செய்யாமலிருக்கிறேனே!

**ரா:** செய்யலாமே! ஏன் இதுகாறும் செய்யாமல் இருந்துவிட்டாய்?

---

**அவருக்குப் பதில் உபகாரம் செய்யவேண்டாமா!**

**ஸ்வா:** செய்வேன்! செய்யாமல் இந்த ஜன்மத்தை வீணுக்கி விடுவேன் என்று எண்ணவேண்டாம் பிரபோ!

**ரா:** என்ன கைங்கரியம் செய்யப்போகிருய் தியாக ராஜா? நான் அறியலாமா?

**ஸ்வா:** இதென்ன கேள்வி ப்ரபோ! தங்களுக்குத் தெரியாதா?

**ரா:** நீயே சொல்லிக் கேட்க விரும்புகிறேன்!

**ஸ்வா:** வெகு நாளைய ஆசை ஸ்ரீ ராமசந்திரா! உம்முடைய கல்யாண குணங்களை நீர் அளித்த வாக்கினல் பாடி மகிழவேண்டும் என்பதே!

**ரா:** அதைத்தான் முன்னம் வால்மீகி முதலிய மஹ ரிஷிகளும், எத்தனையோ பக்திமான்களும் அந்தந்த பாஷை களில் புராணங்களிலும், காவியங்களிலும் பாடி இருக் கிருர்களே! அதைப் படித்தால் போதாதா? நீ வேறு புதிதாக ஸாஹித்யம் செய்து பாடுவானேன்?

**ஸ்வா:** அப்படித் தாங்கள் சொல்லலாகாது ப்ரபோ! பேரியோர்களின் வாக்குகளைத் தினமும் பாராயணம் செய்துவருகிறேன். அதனல் என் ஆசை வளர்கிறது. நானும் மனம் குளிரப் பாடவேண்டும் என்ற என் ஆசை அதிகமாகிறது. எத்தனைதரம் உம்முடைய குணங்களைச் சொன்னுலும், கேட்டாலும், எத்தனைபேர் புதுப்புது கவி தைகள் புனைந்தாலும், அவைகள் குற்றங்களோடு விளங் கினும் பெரியோர்கள் அவைகளைப் பூர்ணமாக ஏற்றுக் கொள்வார்கள் என்பது உலகம் அறிந்ததே! ஆதலால் தாங்கள் எனக்கு அருள் செய்யவேண்டும்.

இதற்கு என்ன பதில் கிடைத்திருக்கும் என்பதை அவருடைய காஞம்ருத வர்ஷமான நூற்றுக்கணக்கான கீர்த்தனங்களே வெளிப்படுத்தும். தன் ஆசை நிறையப் பாடின வாக்யங்களில் பகவானுடைய ஸம்மதமும் பெரி யோர்களுடைய பாராட்டுதலும் பெற்ற கிருதிகள் அனைத் தும் பகவத் ஸம்பந்தம் பெற்று இருப்பதால், மோக்ஷோ பாயமான பக்திமார்க்க ப்ரதர்சனமான பரமோபனிஷத் தின் ஸாரம் என்பதில் ஸந்தேகம் யாது?

---

# குமதி ஸுமதி ஸம்வாதம்.

மாதர் பகுதி.



கௌண்டின்யன்.

நடந்த நவராத்ரியும் நம்தேச மக்கள் பெண்மக்களுக்கு அளிக்கும் மரியாதையைக் காட்டுகின்றது.

குமதி: நவராத்ரிக்கும் பெண்களுக்கும் என்ன ஸம்பந்தம்?

ஸு: நன்ருகக் கேட்டாய்! முழுக்கமுழுக்க பெண்கள் பெருமையே நவராத்ரியில் அனுஷ்டிக்கப்படுகின்றதே!

கு: அதைச் சிறிது விரிவாகச் சொல். கேழ்ப்போம்.

ஸு: நவராத்ரியில் துர்கை, லக்ஷ்மி, ஸரஸ்வதி இவர்களுக்கே பூஜை. பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் இவர்களுக்கு இல்லை. தேவிகளை உத்தேசித்து கன்யா பூஜை, ஸுவாஸினீ பூஜை நடக்கின்றது. பிரம்மசாரிபூஜை, பிராம்மண பூஜை இல்லை.

கு: அது வாஸ்தவம் தான். ஏன் இச்சமயத்தில் இவர்களைப் பூஜிக்கவேண்டும்?

ஸு: ஸௌந்தர்யலஹரீ என்று கேட்டிருக்கின்ருயா?

கு: ஏற்கனவே உனக்கு யான் கூறினேனே வைதிக விஷயங்களில் ஒரு அக்ஷரம் கூட எனக்குத் தெரியாது என்று.

ஸு: அம்பிகையைப்பற்றி ஆதி சங்கரர் இயற்றிய நூறு ஶ்லோகம் அது. ஒவ்வொரு ஶ்லோகமும் ஒவ்வொரு மந்த்ரமாகும். அதில் கூறியவண்ணம் யந்த்ரம் அமைத்து ஜபம் செய்தால் ஸகல கார்யமும் சித்தியாகும்.

கு: ஸரி, அதை எதற்கு இப்பொழுது ஆரம்பித்தாய்?

ஸு: அதில் முதல் ஶ்லோகத்தில் சிவனும் சக்தியோடு கூடினுல்தான் ஒரு காரியத்தை ஸாதிக்க வல்லவன். தனியான புருஷனுக்கு ஶக்தி இல்லையேல் யாதொரு பெருமையும் கிடையாது என்கின்ருர்.

கு: பெரும்பாலும்எல்லோரும் பொருளாலும் பணத்தினுலும் புத்தியினுலும் செய்யவேண்டிய கார்யங்களைச் சக்தியிருந்தால் செய்கிறேன் என்கிருர்களே அது என்ன?

ஸு: அதுதான்! தேவீ பாகவதத்திலும் தேவீ மாகாத்மியத்திலும் நன்ருகக் கூறப்படுகிறது. தேவியே பலமாகவும், தனமாகவும், புத்தியாகவும் இருக்கின்றமையால் எல்லோரும் சக்தி இருக்கின்றது என்கிருர்களேத் தவிற சிவன் இருக்கின்றது, விஷ்ணு இருக்கின்றது என்று சொல்வதில்லை. ஆதலால் சக்திதான் மும்மூர்த்திகளுக்கும் மேலானவள். அவள் பெண் வடிவமானவள்.

---

அமிருதாபிதாநமஸி என்பது அதன் மந்த்ரம்.

கு : அப்படியானால் ஒரே சக்தி பூஜை என்று கூறாமல் துர்கா லக்ஷ்மீ ஸரஸ்வதீ பூஜை என்று கூறுகிறார்களே ! அதன் கருத்து என்ன ?

ஸ்ரீ : இம் மூவருக்கும் சக்தி என்றே பொதுப் பெயர். துஷ்டனைக் கொல்லும் பொழுது துர்க்கை என்றும், செல்வம் தரும்பொழுது இலக்குமி என்றும், கல்வியைத் தரும் பொழுது ஸரஸ்வதி என்றும் கூறுகிறோம். தேவராலும் மூவராலும் கொல்லமுடியாத மஹிஷாஸுரனைக்கொன்று உலகைக் காக்கும்பொழுது, துர்கையானாள்.

கு : அவளை நவராத்ரியில் மாத்திரம் பூஜிக்கக் காரணம் என்ன?

ஸ்ரீ : அச்சமயமே மஹிஷாஸுரன் செய்யும் உபத்திரவம் பொருக்க முடியாமல் தேவர்கள் எல்லாம் ஒன்று கூடி தேவியை உபாசித்தனர். அவரவர்களிடமுள்ள சக்தி ஒன்றாகத் திரண்டுவந்து அஸுரனை ஜயித்தாள்! நவராத்ரியில் எட்டுநாட்கள் வரை தேவர்களின் சரீரத்திலிருந்து சிறிது சிறிதாகச் சேர்ந்து நவமியன்று பூர்ணசரீரத்துடன் கிளம்பி தசமியன்று அஸுரனை ஜயித்தாள்.

கு : ஓஹோ! அதனால்தான் விஜயதமி என்று பெயர் வந்தது போலும்! தேவர்கள் உபாஸித்த காலமும் அம்பிகை அவதரித்த காலமும் பூஜைக்கு விசேஷமென நவராத்ரிபூஜை ஏற்பட்டதுபோலும்! ஆனால் அஸுரனை ஜயித்த துர்கையை அல்லவா நவமியில் பூஜைசெய்யவேண்டும்? ஸரஸ்வதியையல்லவோ பூஜிக்கின்றோம். அதற்கு என்ன காரணம் ?

ஸ்ரீ : நம் நாடு கர்ம பூமியும், மோக்ஷ பூமியுமாம். எதைச் செய்தாலும் அதன் முடிவில் முக்தியே விசேஷமாக வர்ணிக்கப்படும். கல்விக்குத் தேவதை ஸரஸ்வதி. அவள் ஞானத்தைத் தருபவள். ஞானத்தினால்தான் அக்ஞானமழியும். அக்ஞானமழிந்தால்தான் முக்தி உண்டாகும். ஆதலால் நமக்கு ப்ரதிபந்தத்தை விளைவிக்கக் கூடிய அஸுரகுணங்களை ஒழிக்க முதலில் துர்க்கையை பூஜிக்கின்றோம். அடுத்தபடி அழியும் செல்வமும் அழியாச் செல்வமுமான லக்ஷ்மியை மூன்றுநாள் பூஜிக்கின்றோம். இவ்விரண்டுக்கும் லக்ஷ்யமான ஸரஸ்வதியை மூன்று நாளும் பூஜிக்கின்றோம். க்ரமமாக இதுபோல் மூன்று மூன்று நாள் பூஜிக்காவிடினும் நவமியன்று ஸரஸ்வதியை பூஜிக்கின்றோம்.

---

**இதற்குத் தான் பிராணுக்நி ஹோத்ரம் எனப் பெயர்.**

# ஆயுர் வேதம். (14)

வைத்தியப் பகுதி.

Dr. V. K. வெங்கிடசாமி, M. B., B. S., F. I. M.,
1/3, A. D'Sylva Road, Mylapore, Madras-4.

**ஸந்நிபாதார்சஸ்ஸில்** – சென்ற இதழில் வந்த மூன்று தோஷ அர்சஸ்ஸின் குணங்களும் காணும். இவ்விதமாகவே ஸஹஜ அர்சஸ்ஸும் இருக்கும்.

**இரத்தார்சஸ்ஸில்**-மூல முளைகள் குதத்தை அடைத்துக் கொண்டு இருக்கும். மலபந்தம் அதிகம். இரத்தப்போக்கு திடீரென உண்டாகும். மூன்று தோஷங்களின் விருத்திப்படி குறி குணங்கள் மாறியிருக்கும். சாதாரணமாய் **பித்தம்** அதிகம். சிவந்த இரத்தம் அதிகம் போக நேரிடும். அப்பொழுது தேஹபலம் குன்றி ஓஜோதாது க்ஷயிக்கும். அதிக வலியோடு இளஞ்சிவப்பாய் நுரையுடன் இரத்தமிருந்தால் **வாதம்** ஓங்கியிருக்கும். **கபம்** காரணமானால் இரத்தம் சிறிது மஞ்சளாயும் வெளுத்தும் பிசுபிசுப்புடனும் இருக்கும். இரத்தம் மிதமிஞ்சிப் போனால் பாண்டு ரோகம் சம்பவிக்கும்.

**அர்சஸ்** ரோகத்தில் உபத்திரவங்கள் பல. மூன்று தோஷங்களும் தாக்கப்படுகின்றன. வியாதி ஒரு தோஷத்தாலுண்டானதும், குதத்தின் வெளிப்புறத்து வலியில் மட்டும் தங்கியிருக்கிறதும், சமீபகாலத்தில் உண்டானதுமாயிருந்தால் சிகித்ஸைக்கு வசப்படும். ஸஹஜ அர்சஸ்ஸும், ஸந்நிபாத அர்சஸ்ஸும் சிகித்ஸைக்குக் கஷ்டசாத்தியம். தேகத்தில் பலவிடங்களில் வீக்கம், வலி, மயக்கம், வாந்தி, ஜ்வரம், நாவறட்சி, ஆஸனத் துவாரத்தில் அழற்சி, அதிசாரம், அதிக இரத்தம் வெளிப்படல் முதலியவை அஸாத்திய லக்ஷணக் குறி குணங்களாம்.

சிலசமயம் வியானவாயு கபத்துடன் சேர்ந்து, குதத்தின் வெளிப் புறத்து சர்மத்தை, தோஷ வேறுபாட்டுப்படி, கடினமாகவும், கறுப்பாகவும், கிரந்தி போன்றதாகவும் பண்ணும். வலியுமிருக்கும். இதற்கு **சர்மகீலமெனப்** பெயர்.

அர்சஸ் குதத்துவாரம் தவிர, கர்ணம், நாசி, ஆண்குறி, நாபி போன்ற மற்ற இடங்களிலும் உண்டாகலாம். அவை மிருதுவாக, பிசுபிசுப்புடன், மண்ணுள்ளிப்பாம்பு முகம்போன்றிருக்கும்.

---

**மூன்று அக்நிகளில் ஹோமம் செய்வது அக்நிஹோத்ரம்.**

நவீன சாஸ்திரப்படி குதத்தில் உண்டாகும் அர்சஸை **பைல்ஸ்** அல்லது **ஹெமராய்ட்ஸ்** என்பார்கள். இங்கு சளி ரத்தக்குழாய்கள் அகண்டு ரத்தம் தங்கி முளைகளை உண்டுபண்ணுகின்றன. அழற்சியினுலோ, சிதைவுறுவதாலோ, இரத்தம் அடிக்கடி வெளிவரும். சில சமயம் இரத்தமின்றி வலி அதிகம் இருக்கும். வெளியில் ஒன்றும் தெரியாது. **இன்டர்நல் பைல்ஸ்** எனப் பெயர். சில சமயம் ஆஸனவாயின் வெளியில் தோல் மூடிய சதை தொங்கும். அது அடிக்கடிப் பருத்து அதிக வலியைக் கொடுக்கும். இதை **எக்டர்னல் பைல்ஸ்** என்பார்கள். குதத்தில் உண்டாகும் **பாலிபஸ், ஸிபிலிஸ், கான்ஸர்** போன்ற வியாதிகள் கூட அர்சஸ் என்ற குறிகுணங்கள் உடையன. இவைகளுக்குச் சிகித்ஸை வேருனதால் நிபுணர்களைக்கொண்டு பரீக்ஷை செய்து சரியான நிதானத்தை நிர்ணயித்துக் கொள்ளவேண்டும். குதம் தவிர வேறிடங்களில் வரும் அர்சஸ் இத்தகைய வகைகளைச் சேர்ந்தவைகளாய் இருக்கும்.

இங்கு நாம் சிகித்ஸைக்கு எடுத்துக்கொள்ளப் போவது பைல்ஸ் என்ற குதத்திலுண்டாகும் அர்சஸ் அல்லது மூலரோகம் ஒன்றுதான். அப்படிப் பரிஹாரம் செய்யவேண்டிய முக்கிய குறிகுணங்களாவன? மூல முளைகளின் அழற்சியாலுண்டாகும் **வலியும், வீக்கமும்,** அதிக இரத்தப் போக்குமாம்.

மூலரோகத்தின் ஆரம்பகாலத்தில், ஆகார விவஹாரங்களை, ஒரு திட்டப்படுத்திக் கொண்டால், வியாதி விருத்தியாகாமலும் தொந்தரவு ஒன்றுமில்லாமலும் இருக்கும். முக்கியமாய் மலச்சிக்கலை விலக்கவேண்டும். இதற்காக ஆகாரத்துடன் தினமும் கீரைகளைச் சேர்க்கலாம். மூலம் உபத்திரவம் இருக்கும்போது, துத்திக்கீரையைப் பருப்புடன் சமைத்துச் சாப்பிடவும். இரவில் ஒன்று இரண்டு பூவன் வாழைப்பழம் உட்கொள்ள மலம் தாராளமாய்ப் போகும். விளக்கெண்ணெயில் பேயன் வாழைப்பழத்தை துண்டாக்கி ஊறப்போட்டு, இரவில் ஒன்று இரண்டு துண்டுகள் சாப்பிட்டால் மலச்சிக்கல் இராது. (அடுத்த மாத இதழில் மலம்போக மூலரோகத்தில் மருந்தாக உபயோகப்படுவது வெளிவரும்.)

---

**அதைப் போல் ப்ராஜ்ஞக்நி ஹோத்ரம் அமைந்தது**

# ஸந்தேஹ விளக்கம்.

K. V. துரைசாமி, காசிநாயகம்பட்டி.

10. பிரதான ஹஸ்தம் உடைந்து பின்னமான பன்னிரு கரமுள்ள குஹன் விக்ரஹத்தை சிமிட்டால் ரிப்பேர் செய்து, வேறு இடமில்லாததால் தெற்கு முகமாக கோவிலில் பிரதிஷ்டை செய்யலாமா?

பின்னமான விக்ரஹங்களை பூஜிக்கக்கூடாது. அதனால் குடும்பத்திற்கு கஷ்டமேற்படும் என ஆகமம் கூறுகிறது.

கோபாலன், புஷ்பத்தூர். (11-17)

11. ஸ்த்ரீகள் பஞ்சாயதன பூஜையை செய்யலாமா?

விக்ரஹங்களை மாத்ரம் புருஷன் உத்தரவிட்டால் பூஜிக்கலாம். பாணம் ஸாளக்ராமங்களை தொடவும் கூடாது.

12. காலையில் முடியாவிடில் மாலையில் பூஜை செய்யலாமா?

ஸ்நானம் செய்து ஆஹாரமின்றி சுத்தமாயிருந்தால் பூஜிக்கலாம். பலஹாரம் செய்திருந்தாலும் ஸ்நானம் செய்து பூஜிக்கலாம்.

13. மஹா நைவேத்யம்-அன்னம் இல்லாமல் பூஜைசெய்யலாமா?

கூடாதுதான். ஆனால் அதற்காக பூஜையை நிறுத்தி விடுவதைவிட, சுத்தமாக அன்னம் கிடைக்காவிடில் பழம், பால், தேங்காய் முதலியவைகளை நிவேதனம் செய்யலாம்.

14. வெளியில் போகும்போது பூஜையை எடுத்துப்போகமுடியாத காலத்தில் என்ன செய்வது?

மற்றவரில்லாவிடில் வீட்டில் மனைவியை நிவேதனம் மாத்ரம் செய்யச் சொல்லிவிட்டு மநதினால் பூஜை செய்க.

15. உபதேசமில்லாமல் மந்த்ரம், ராமாயணம், கீதை பாராயணம் செய்தால் பலனில்லையா?

குருமுகமாக உபதேசம்பெற்றால்தான் பூர்ணபலனைத் தரும். குரு கிடைக்காத பக்ஷத்தில் தக்ஷிணாமூர்த்திஎதிரில் வைத்து அவர் உபதேசித்ததாக நினைத்து ஆரம்பிக்கலாம். ஒருபலனை நாடி ஜபாதிகள் காம்யமாகச்செய்தால் கண்டிப்பாக உபதேசம் பெற்றால்தான் பயன்கிட்டும்.

பொதுவாக புண்யத்தை மாத்ரம் நாடினால்கூட உபதேசம் முக்யம். குரு ஸர்வதா கிடைக்காதவிடத்தில்தான் முன் சொன்ன முறையை அநுசரிக்கலாம்.

16. ஸ்வரமின்றி ருத்ர சமகங்களை சுலோகம்போல் கூறி பூஜை செய்யலாமா?

கூடவே கூடாது. கூறினால் விபரீத பலனுண்டாகும் என ஶாஸ்த்ரம் கூறுகிறது.

---

**தவறில்லாமல் இதைச் செய்தால் அக்னி ஹோத்ர பலன்.**

17. சிவானந்தலஹரி போன்ற ஸ்துதிகளை எப்போது சொல்வது? அபிஷேக காலத்தில் கூறலாமா?

பூஜை முடிந்த பிறகே மந்த்ரபுஷ்பமானபின் கூற வேண்டும்.

ஒரு சந்தாதாரர்.

18. தை மாதப் பிறப்பு சுமார் பகல் 4மணிக்குப் பிறந்தால் புண்யகால தர்ப்பணம் எப்போது செய்வது? ஸங்க்ராந்தி பூஜை எப்போது செய்வது?

ஸந்த்யா காலத்திலும், இரவிலும் மாதம் பிறந்தால் மறுநாள்தான் தர்ப்பணம், பூஜை. ஸந்த்யா காலத்திற்கு முன்பு மாதம் பிறந்தால் த்ருக்கணித பஞ்சாங்க ரீதியாக 4-17க்கு தர்ப்பணம், அதற்குப் பிறகே பூஜை.

P. சந்த்ரமௌளி, சென்னை.

19. வீட்டில் மூன்று ப்ரும்மச்சாரிகள் இருக்கலாமா?

கூடாதென எங்கும் சாஸ்த்ர நிஷேதமில்லை. ஆனால் காலத்தில் உபநயநம் செய்வதுதான் நியாயம்.

---

## தார்மிகச் செய்திகள்.

**சென்னையில் ஸம்ஸ்கிருத ஸர்வ கலாசாலை:** ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் அநுக்ரஹத்துடன் விரைவில் ஏற்படும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடக்கின்றன எனக் கேட்டு ஸந்தோஷத்துடன் தெரிவிக்கின்றோம்.

**காமாக்ஷீ கல்யாண நிலையம்:** இப்பெயருள்ள அழகிய விவாஹ மண்டபத்தை சென்னை, T. நகர் புதிய போக் ரோட்டில் ஸ்ரீ ரவால் கிருஷ்ணய்யரவர்கள், விவாஹ உபநயநாதிகளுக்கென அமைத்து இருக்கிறார். இது வரை சென்னையில் பிராம்மணர்கள் இத்தகைய தர்மம் செய்யவில்லை. இது விசாலமாகவும் ஜல வசதி தனித் தனியாக ஸம்மந்திகளுக்கிடம் பாக பாத்ரம் பாகசாலை போஜனசாலை முதலியன மிக மிக நன்றாக அமைந்துளது. ஆஸ்திகர்களும் பிராம்மணர்களும் ஸ்ரீ அய்யருக்கு நன்றியுடன் ஆசீர்வாதம் செய்கிறார்கள்.

**நாமகிரி கல்யாண மண்டபம்:** சென்னை மைலாப்பூர் லஸ்சர்ச் தெருவில் சுதேசமித்ரன் ஆசிரியர் அமைத்து, பேருபகாரம் செய்தது கொண்டாடத்தக்கது. முதலில் ஸ்ரீவிஷ்ணுவை எழுந்தருளச்செய்தார்.

**சேலத்தில் ஸ்ரீ சங்கர மடம்:** ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சிருங்கேரி சங்கராசார்ய ஸ்வாமிகளின் அநுக்ரஹத்தால் ஒரு மடம் விரைவில் அமைக்கப்படும்.

**தென்னிந்திய பஜனை சமாஜம், கல்கத்தா:** 9-11-59லிருந்து ஷ சமாஜத்தின் சார்பில் செங்கோட்டை ஸ்ரீ பாலகிருஷ்ண சாஸ்த்ரீ தேவீ பாகவத ப்ரவசனம் செய்தார்கள். ஒருமாதகாலம் நடந்துவந்த இந்த ப்ரவசனத்தில் ஏராளமானபக்தர்கள் கூடி சிறப்பித்து ச்ரவணம் செய்தார்கள்.

---

**இவ்வளவு சுலபமாக கர்மா ஏற்பட்டுள்ளது.**

## மார்கழிமீ கோசாரப்பலன்



ஜோதிஷபானு E. S. K. ஸ்வாமி, பாரத் கிரஹ ஸஞ்சார ஆசிரியர்,
4, கிருஷ்ணமாசாரி தெரு, தி. நகர், சென்னை-17.

### மேஷ ராசி

அசுவனி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய

குரு எட்டிலும், சனி பாக்கியத்திலும், ராகு ஆறிலும், கேது விரயத்திலும் இருக்கிறார்கள். சூரியன் தனுசில் பாக்கியத்தில் இருக்கிறார். இதனால் தெய்வ பக்தியில் ஈடுபட நேரும். பெரியோர் நேசம் ஏற்படும். புண்ணிய காரியங்களில் செலவுகள் உண்டாகும். பழைய வியவகாரங்கள் மூலம் சிலருக்கு கிலேசமும், தாமத நடப்புகளும் ஏற்பட்டு வரும். தக்ஷிணாமூர்த்தி அஷ்டோத்ரப் பாராயணம் செய்துவர நன்மை.

### ரிஷப ராசி

க்ருத். 2ம் பாதம் முதல் ரோகிணி மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய

குரு ஸப்தமத்திலும், சனி அஷ்டமத்திலும், ராகு நான்கிலும், கேது லாபத்திலும் இருக்கிறார்கள். சூரியன் அஷ்டமத்திலிருக்கிறார். இதனால் முக்ய சினேகிதர், பந்து இவர்களில் ஒருவர் பிரிவு ஏற்படும். ஆரோக்ய ஸம்பந்தமான செலவுகள் ஏற்படும். அலைச்சல் காரியங்கள் உண்டாகும். வீண் அபவாதம் உண்டாகும். சனிக்கிழமை தோறும் சனிக்கு அர்ச்சனை செய்து வர நன்மை.

### மிதுன ராசி

மிருக. 3ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்வசு 3ம்பாதம் முடிய

குரு ஆறிலும், சனி ஏழிலும், ராகு நான்கிலும், கேது ஜீவனத்திலுமிருக்கிறார்கள். சூரியன் ஏழில் இருக்கிறார். பந்துவால் கிலேசம். செய் தொழிலில் சோர்வு ஏற்படும். குடும்ப சிந்தனை உண்டாகும். முயற்சிகள் தடைபடும். சிலருடன் பகை ஏற்படும். விஷ்ணு ஸகஸ்திர நாம பாராயணம் அவசியமாகும்.

### கடக ராசி

புனர்வசு 4ம் பாதம் முதல் புஷ்யம், ஆயில்யம் முடிய

குரு பஞ்சமத்திலும், சனி ஆறிலும், ராகு மூன்றிலும், கேது பாக்கியத்திலுமிருக்கிறார்கள். சூரியன் ஆறிலிருக்கிறார். இதனால் ரோக பீடிதம் ஏற்படும். குடும்ப செலவுகள் அதிகமாகும். வரவேண்டியவை தடைப்படும். பிறர் உதவியை நாடும்படியாகும். புதிய முயற்சிகளில் சிந்தனை ஏற்படும். சிலருக்கு பணமுடைஅதிகமாகும். சுப்பிரமணியருக்கு அபிஷேக ஆராதனை செய்யநலம்.

### சிம்ம ராசி

மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய

குரு நான்கிலும், சனி பஞ்சமத்திலும், ராகு இரண்டிலும், கேது அஷ்டமத்திலும் இருக்கிறார்கள். சூரியன் பஞ்சமத்திலிருக்கிறார். இதனால் செய் காரியங்களில் சோர்வு ஏற்படும். தேக சுகக்குறைவு ஏற்பட்டு நீங்கும். புதியவகை முயற்சிகள் கூடும். அதிகாரி ஆதரவு ஏற்படும். பந்து பகை ஏற்படும். உழைப்பு அதிகமாகும். லலிதா அஷ்டோத்திரப்பாராயணம் செய்வதுநன்மை.

### கன்னியா ராசி

உத்திரம் 2ம் பாதம் முதல் ஹஸ்தம் சித்திரை 2ம் பாதம் முடிய

குரு மூன்றிலும், சனி நான்கிலும், ராகு ஜன்மத்திலும், கேதுஏழிலு மிருக்கிறார்கள். சூரியன் சுகத்திலிருக்கிறார். இதனால் குடும்பத்தில் வயித்தியவகை செலவுகள் ஏற்படும். சோர்வு உண்டாகும். பணமுடை. வரவேண்டியவை

இதையேனும் கவனித்து ஸ்ரத்தையுடன் செய்க

தடை இப்படி ஏற்படும். பிறர் உதவியை நாடும்படியாகும். பந்துக்களால் கிலேசம் ஏற்படும். மேலோர் ஆதரவு ஏற்படும். ஆதித்ய ஹிருதய பாராயணம் செய்துவர நன்மையாகும்.

## துலா ராசி

### சித். 3ம் பாதம் முதல் சுவாதி விசாகம் 3ம் பாதம் முடிய

குரு இரண்டிலும், சனி மூன்றிலும், ராகு விரயத்திலும், கேது ஆறிலும் இருக்கிறார்கள். சூரியன் மூன்றிலிருக்கிறார். இதனால் அசுபசேதி கேள்விப்பட நேரும். குடும்ப சுகம் ஏற்படும். முயற்சி தடைப்பட்டுக் கூடும். ஆரோக்ய வகையில் செலவுகள், வெளியூர் போய்வருதல், வீண்வகையில் செலவுகள் இப்படி ஏற்படக் காரணமாகிறது. பிரதி வெள்ளிக்கிழமையிலும் லக்ஷிமி பூஜை செய்வது நலம்.

## விருச்சிகராசி

### விசாகம் 4ம் பாதம் முதல் அனுஷம் கேட்டை முடிய

குரு ராசியிலும், சனி இரண்டிலும், ராகு லாபத்திலும், கேது பஞ்சமத்திலு மிருக்கிறார்கள். சூரியன் தனத்திலிருக்கிறார். குடும்ப விஷயமான கவலைகள் ஏற்படும். தன் சொல்லே தனக்கு விரோதமாகும். அலைச்சல் காரியங்கள் அதிக மாகும். சில பொருள் விற்க நேரும். வீண் சிந்தனைகள் ஏற்படும். துர்க்கா பூஜை செய்துவருவது நன்மை.

## தனுர் ராசி

### மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய

குரு விரயத்திலும், சனி ராசியிலும், ராகு பத்திலும், கேது சுபத்திலு மிருக்கிறார்கள். சூரியன் ராசியில் இருக்கிறார். இதனால் தேக சுகக்குறைவு, சிலர் பகை ஏற்படுதல், வீண்வகையில் செலவுகள், பந்து, சிநேகிதரிடம் பகை, விவாத விஷயங்களில் கலத்தல், செலவு மிகுதி இப்படி ஏற்படும். சனிக்குத் தினமும் ஒரு விளக்கு போட்டுவர நன்மை.

## மகர ராசி

### உத்திரா. 2ம்பாதம் முதல் திருவோணம், அவிட். 2ம்பாதம் முடிய

குரு லாபத்திலும், சனி விரயத்திலும், ராகு பாக்கியத்திலும், கேது மூன்றி லுமிருக்கிறார்கள். சூரியன் விரயத்திலிருக்கிறார். இதனால் ராஜாங்க மூலமாய் கவலை, பொருள் நஷ்டம், சிலர் பகையாதல், செய் காரியங்களில்ச் சோர்வு, சில்லரைக் கடன் நச்சரிப்பு, முயற்சிக் கூடாமை இப்படி ஏற்படும். விநாயக ருக்கு அபிஷேகம் செய்வது நலம்.

## கும்ப ராசி

### அவிட்டம் 3ம் பாதம் முதல் சதயம், பூரட். 3ம் பாதம் முடிய

குரு ஜீவனத்திலும், சனி லாபத்திலும், ராகு அஷ்டமத்திலும், கேது இரண்டிலும் இருக்கிறார்கள். சூரியன் லாபத்திலுமிருக்கிறார். இதனால் வெளி யூர் போய்வருதல், புதிய ஏற்பாடு செய்தல், குடும்ப நடப்பில் கிலேசம் இப்படி ஏற்படும். தெய்வ சிந்தனை ஏற்படும். புண்ணிய வகையில் செலவுண்டாகும். பந்து பகை, சிநேகப் பிரிவு இவை எற்படும். ருத்ராபிஷேகம் செய்ய நலம்.

## மீன ராசி

### பூரட்டாதி 4ம் பாதம் முதல் உத்திரட்டாதி, ரேவதி முடிய

குரு பாக்கியத்திலும், சனி ஜீவனத்திலும், ராகு ஏழிலும், கேது ராசியிலும் இருக்கிறார்கள். சூரியன் பத்திலிருக்கிறார். இதனால் உத்தியோக மாற்றம் அல்லது தொழில் மாற்றம் ஏற்படும். புதிய ஏற்பாடுகள் உண்டாகும். பெரிய மனுஷ்யர்கள் நேசமுண்டாகும். குடும்ப சுகம் குறையும். வயித்தியச்செலவுகள் ஏற்படுவதாகும். நவக்கிரஹ ஹோமம் செய்வது உத்தமம்.

---

பத்மா தோழிகளுடன்கூட கிளியினிடம் யான் என்ன செய்யவேண்டும் கூறு, என்று கேட்டவுடனே கிளி மரத்தி லிருந்து இறங்கி வந்து, பத்மா கேட்ட கேள்விகளுக்கு பதில் கூறிற்று. ப்ருமமாவின் ப்ரார்த்தனைக்கு இணங்கி ஸாக்ஷாத் வைகுண்டநாதன் தர்மத்தை ரக்ஷிப்பதற்காக ஶம்பள நகரத்தில் விஷ்ணுயஶஸ் என்பவருடைய வீட்டி லே அவதரித்திருக்கிறார். அவருக்கு நான்கு ஸகோதரர் களும், அம்சாவதாரமான சில பந்துக்களுமிருக்கின்றனர்.

விதிப்படி உபநயனம் செய்துகொண்டு பரசுராமர் இடத்தில் ஸகல வேதங்களையும், உபவேதமான தநுர் வேதத்தையும் கற்றார். அவர் உத்தரவுப்படி ஶிவனை ஆரா தித்து அஶ்வம், கிளி, கவசம், கத்தி முதலியவைகளைப் பெற்று, மறுபடியும் ஶம்பள நகரம் வந்தார். விஶாக யூபன் எனும் அரசன் இவரது பெருமையை அறிந்து ஶரணமடைந்தான். அவர் கூறிய தர்மங்களைக் கேட்டு அவனைலானவரை அதர்மங்களையகற்றி தர்மத்தை ரக்ஷித்து வருகிறான். என்று கிளி கூறியதைக் கேட்டு பேரானந்த மடைந்த பத்மா அதற்குத் தான் கூறியவண்ணம் உப சாரம் செய்தாள். ஆடையாபரணங்களால் அலங்கரித்து அஞ்ஜலி செய்து வேண்டினாள். ஓ ஶுகமே! அவரிடம் எப்படி என் அபிப்ராயத்தை அறிவிப்பது? என்று கூட அறியாத நான் எதை விக்ஞாபனம் செய்யப்போகிறேன்! ஸ்த்ரீகளுக்குள்ள இயற்கையான பயத்தால் என்ன செய் வது என்று ஒன்றும் தெரியவில்லை. அந்த ப்ரபுவை எப்படியாவது நீ இங்கு அழைத்துவா. அவர் 'வராவிடில் எனது அன்புடன் கூடிய நமஸ்காரத்தைக் கூறு. ஶிவன் தந்த வரத்தையும், காமத்துடன் என்னைக்கண்ட ராஜ குமாரர்கள் பெண்ணாகி எனக்குப் பணிவிடை செய்வதை யும் அவரிடம் தெரிவி என்றாள்.

இதைக்கேட்டு கிளி அவளை வணங்கி விடைபெற்றுக் கொண்டு ஶம்பள நகரத்திற்குப் பறந்து வந்தது. அதைக் கண்டு ஸந்தோஷமடைந்த பகவான் கல்கி, அதை வர வேற்று மடிமீது அமர்த்தி ஆடை ஆபரண அலங்காரங் களைக்கண்டு களித்தார். அதற்குப் பாலளித்து கையில் வைத்துக்கொண்டு மற்றொரு கரத்தால் அதன் உடலைத் தடவிக்கொண்டு அதன் முகத்தோடு தன் முகத்தை வைத் துக்கொண்டு பலவகையான கதைகளைப் பேசினார். எங் கெந்த திக்குகளுக்குச் சென்றாய்? என்னென்ன அபூர்வ

விஷயங்களைக் கண்டாய்? எங்கே இத்தனை நாள் வஸித்தாய்? எங்கிருந்து இந்த ஆடை ஆபரணங்களைப் பெற்றாய்? இரவும் பகலும் உன்னுடன் கூடவே இருக்க விரும்பினேனே! நீ சென்று வெகுநாளாயிற்றே! என்று பகவான் கேட்டதற்கு, கிளி அவரை வணங்கி நடந்தபடி பத்மாவின் கதையைக் கூறிற்று. பத்மாவின் வினய நமஸ்காரத்துடன் கூடிய விக்ஞாபனத்தைக் கேட்டு பகவான் கல்கி அக்கிளியுடன்கூட ஸிம்மள த்வீபத்தை நாடிக் கிளம்பினார். ஶிவனளித்த குதிரைமீது அமர்ந்தார். கருட வேகத்துடன் கிளம்பிற்று குதிரை. கடலைக்கடந்து பலவகை விமானங்களுள்ளதும், ஸ்வர்ணமயமான பல மாட மாளிகைகள் நிறைந்ததும், வானளாவும் கோபுரங்களுள்ளதும், பத்மகந்தி எனும் ஜாதிப்பெண்களின் வாசனையால் எங்கும் ஒரே பரிமளம் வீசுவதும், ஸ்வர்க்கமோ வைகுண்டமோ என நினைக்கும்படி ப்ரகாசிக்கும் காருமதி எனும் நகரத்தை அடைந்தார்.

அங்குமிங்கும் அழகாக நடக்கும் ஹம்ஸங்கள் நிறைந்த தாமரை ஓடைகள், கண்ணாடிபோல் பிரகாசிக்கும் தெளிந்த நீருள்ள தடாகம், பல்வகை மரங்கள், ஓங்கி வளர்ந்து ஸூர்ய கிரணமே பூமியில் படாத வண்ணம் விளங்கும் உத்யானவனங்கள், பூத்துக்காய்த்துக் கனிந்து வண்டுகளது ரீங்காரத்தால் வருவோரை வரவேற்கும் விருக்ஷபங்க்தி முதலியவைகளைக் கண்டு கல்கி ஆநந்தமடைந்தார். கிளியை நோக்கி ஸாதுக்களின் உள்ளம் போல் தெளிந்து ஸ்வச்சமாக உள்ள இந்த தடாகத்தில் ஸ்நானம் செய்கிறேன் என்றார். பிரபுவின் இங்கிதத்தை அறிந்த கிளி அப்படியே ஆகட்டும், அதற்குள் பத்மாச்ரமம் சென்று தாங்கள் வந்த நற்செய்தியைப் பத்மாவிடம் தெரிவிக்கிறேன் என விடைபெற்றுச் சென்றது கிளி.

## த்விதீயாம்சம் – இரண்டாம் அத்யாயம்.

பத்மா இருக்கும் அரண்மனையில் புகுந்து நாகேஸ்வரமெனும் மரத்திலமர்ந்து, அவளை தாமரைத்தண்டின் உள்ளே இருக்கும் நூல்களாலாகிய ஶயனத்தில் படுத்து ஸகிகள் சூழ்ந்து ஸமாதானம் செய்வதையும் தாபத்தை யகற்ற பலவகையான ஶைத்ய உபசாரம் செய்வதையும் கண்டது. ஒரு ஸகி தாமரைப் பூவினால் பன்னீர் கலந்த சந்தனத்துடன் விசுறுகிறாள். பத்மாவின் உஷ்ணமான மூச்சுக்காற்றால் அருகிலுள்ள தாமரை மலர்கள்

வாடி வதங்கின. ரேவா நதியிலிருந்து சீதளமாயும் புஷ்ப வாஸனையை வீசுவதாயும் மந்தமாகவும் வரும் காற்றை காட்டுத்தீபோலக் கருதினாள். காந்தனை விட்டுப் பிரிந்து இருக்கும் காந்தைக்கு இந்த நிலை. இருவரும் சேர்ந்து இருந்தால்தான் நிலா மந்தமாருதம் சந்தனம் புஷ்பம் முதலியவைகள் இன்பந்தரும். பிரிந்திருக்கும் விரஹ காலத்தில் இவைகளே துன்பந்தரும் பொருள்களாகும். இங்ஙனம் விரஹ அவஸ்தையிலுள்ள பத்மாவைக் கண்டது ஶுகம். கருணையுடன் அவளைப் பல இன்பச் சொற்களால் ஸமாதானப் படுத்திற்று. பத்மா! நான் ஸுகமாகச் சென்று திரும்பிவந்தேன். நீ ஸுகமாக இருக்கிறாயா? என்றது கிளி. பத்மா உடனே பரபரப் புடன் எழுந்து வருக! வருக!! உமது வரவு நல் வரவு ஆகுக. நீர் சென்ற பின் நான் மிகத் துன்பமடைந்தேன் என்றாள்.

**ஶுகம்:** திவ்ய ரஸாயநத்தால் உனக்கு ஶாந்தி ஏற்படும்.

**பத்மா:** எனக்கு எங்கு கிடைக்கப்போகிறது ரஸாயநம்?

**ஶுகம்:** சிவனை அண்டிய உனக்கு அது ஸுலபமே.

**பத்மா:** பாக்கியமில்லாத எனக்கு எங்கிருந்துகிடைக்கும்?

**ஶுகம்:** இங்கேயே கிடைக்கப்போகிறது. உனது பாக்யத்தை ஸரஸ்தீரத்தில் அமர்த்தி விட்டு உன்னிடம் வந்தேன்! அதைத் தெரிவிக்க! என்று கிளி கூறியவுடன் பத்மாவின் முகம் மலர்ந்தது. உடல் குளிர்ந்தது. மனம் ஆநந்தபிரவாகத்தில் அமிழ்ந்தது. தனது கண்களை கிளியின் கண்ணில் சொருகுவது போல் பார்த்தாள்.

விமலா மாலினீ லோலா கமலா காமகந்தலா விலாஸினீ சாருமதீ குமுதா என்ற எட்டு தோழிகளும் பத்மாவின் தாபத்தையகற்ற ஜலக்ரீடைக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தனர். அவர்களை நோக்கி பத்மா, தோழிகளே! ஜலக்ரீடை வேண்டாம், இங்கு வாருங்கள், என்றழைத்தாள். அனைவரும் ஆதரவுடன் ஓடிவர பல்லக்கில் அமர்ந்து ஸகிகளும் காவற்காரர்களும் சூழ கல்கி இருக்குமிடத்தை நாடிக் கிளம்பினாள். அது ருக்மிணீ தேவி கிருஷ்ணனை நாடிச்சென்றது போலிருந்தது. பத்மா வருவதைக் கேட்டு வழியிலும் கடைத்தெருவிலுமுள்ள

புருஷர்களனைவரும் பத்மாவைக் கண்டால் பெண்ணுகி விடுவோமென அஞ்சி உள்ளே பதுங்கிச் சென்றனர். பல்லக்குச் சுமக்கும் புருஷர்களும் அங்ஙனமே பயப்பட பலசாலிகளான பெண்களே பல்லக்கைச் சுமந்து சென்றனர். பத்மாவின் மநம் அதிவேகமாகச் சென்று ஸ்ரீ கல்கியைக் காண அவாக்கொண்டது. ஆயினும் ஸகிகள் கூறியபடி ஜலக்ரீடை என்ற வ்யாஜமாக ஸ்நாநம் செய்து சுத்தமாக பகவானைத் தர்சிக்கக்கருதி ஜலக்ரீடை செய்வோமென ஆரம்பித்தாள். தோழிகளும் ஆடிப்பாடி விளையாட, ஆங்குள்ள தாமரைப் புஷ்பங்களை விட்டு அவைகளைவிட வாசனை நிறைந்த ஸ்த்ரீகள் முகத்திற்கு வண்டுகள் ஓடிவந்தன. பலவகையாக லீலை செய்தாலும் பத்மாவின் மநம் பகவானிடமேச் சென்றது.

பத்மா விரைவாக லீலையை முடித்துக் கொண்டு ஸகிகளுடன் கூட ஶுகம் குறிப்பிட்ட கதம்பவநத்தருகே சென்ருள். மணிமயமான வேதிகையில் ஸர்வாபரண பூஷிதராக ஸூர்யனைவிட மிக காந்திவாய்ந்தவராகப் பிரகாசிக்கும் பகவான் கல்கியை ஶுகத்துடன் கூடச்சென்று பத்மா தர்சித்தாள். தமாலமரம் போல் நீலவர்ணம், பீதாம்பரம், லக்ஷ்மீ விலாஸம், தாமரைப்போன்ற நேத்ரம், முழங்கால்வரை நீண்டு தொங்கும் கரங்கள், விஶாலமான மார்பு, மார்பில் ஒருபுரம் ஸ்ரீவத்ஸம், மற்ருெருபுறத்திலே கௌஸ்துபம் இத்தகைய அத்புதமான ரூபத்தைக் கண்டாள். ஒரு நிமிஷகாலம் அசைவற்று நின்ருள். அவரைப் பூஜிக்கவேண்டும் என்பதை மறந்து தன்னையே மறந்தாள். தூங்குகின்ற அவரை ஶுகம் எழுப்ப ஆரம்பித்த போது வேணடாம், எழுப்பாதே என்று தடுத்தாள்.

மிக அழகான ரூபம், சிறந்த பலம், உயர்ந்த தேஜஸ் முதலியவைகள் நிறைந்த இந்த புருஷோத்தமனும் எழுந்து தன்னைப் பார்த்தவுடன் மற்ற ராஜகுமாரர்களைப் போல் பெண்ணுகி விடுவரோ என்பது அவளது அச்சம். சிவனளித்த வரம் மிக்க வீர்யமுள்ளதல்லவா? என எண்ணிஞள். தத்வமறிந்த கிளி தூங்காமல் தூங்கும் பகவானை எழுப்பிற்று. அதி ரூப லாவண்யம் வாய்ந்த பத்மா அருகிலுள்ளதைப் பார்த்தார். ஸாக்ஷாத் லக்ஷ்மியே இவள். தூங்கி எழுந்தவுடன் இத்தகையவர் முகத்தில் விழித்தால் பெரும் லாபம் கிடைக்குமெனக் கருதிஞர்.

தோழிகளுடன்கூட வந்தவளைக் கடைக்கண் பார்வையோடும் குனிந்த முகத்தோடும் உலகை மயக்குகின்ற மாயை போல் உள்ள பத்மாவைப் பார்த்து கல்கி பகவான் மன்மத விகாரம் உள்ளவர்போல் பேசினர்.

ஹே காந்தே ! இங்கே வா ! உனது வரவு நல்வரவு ஆகுக ! உனது வரவால் எனக்கு க்ஷேமமுண்டாகும். உனது முகச்சந்த்ரன் எனது காமதாபத்தை அகற்றும். காமமெனும் ஸர்பம் தீண்டிய எனக்கு உனது அழகெனும் அம்ருதம் சாந்தியைத் தரும். மதயானை போல் என்னை ஆட்டிவைக்கும் மன்மதனுக்கு உனது இரு கரங்கள் அங்குசம் போலிருக்கட்டும். எனது மநதிலுள்ள உன் ஆசையே உருண்டு திரண்டு வந்தது போல் நிற்கின்றாய். வேதிபோல் குறுகிய உனது இடுப்பும் மூன்று மடிப்புகளில் நீலக்கற்களாலாகிய சங்கிலி போலுள்ள ரோமாவளியும் எனக்கு இன்பத்தைத் தரட்டும். வாழை போன்ற துடையும் மணல் திட்டு போன்ற நிதம்பமும் அழகிய மெல்லிய பட்டாடையால் மூடப்பட்டிருந்தும் என் மனதைக் கொள்ளை கொள்ளுகின்றன. உனது பாதபத்மத்தின் பாதஸரத்தில் உள்ள சிறிய மணிகளின் ஶப்தத்தால் மிக அழகான ஹம்ஸ ஶப்தம் உள்ளது போலும் விரல்கள் எனும் பத்ரமுள்ளது போலும் இருக்கிறது. அது எனது தாபத்தை நீக்கட்டும்.

இங்ஙனம், கலியின் குலத்தையே அழிக்க வந்த பகவான் கல்கியினுடைய அமிருதம் போன்ற வாக்கைக் கேட்டாள் பத்மா. ஸகிகளுடன் கூடி இவர் ஸத்புருஷர்! நம் தாபத்தையகற்றவந்த விஷ்ணுமூர்த்தி எனத் தீர்மானித்தாள். அஞ்ஜலிசெய்து இயற்கையான அச்சம் நாணம் அடக்கமெனும் குணங்களைச் சிறிது அடக்கி தைர்யமாய் அழகாக விநயத்துடன் வேண்டினள். பகவானை நகசிகை வரை தர்சிக்க அவா இருந்தும் குனிந்த தலையுடன் கடாக்ஷத்தால் அவரழகைக் கண்டு மகிழ்ந்தாள்.

## த்விதீயாம்சம் – மூன்றும் அத்யாயம்.

கருணைக் கடலான மஹாவிஷ்ணு அவர். தன்னை ஏற்கவே வந்து இருக்கிறார் என்பதை உணர்ந்ததால் ஆநந்தம், பேசமுடியாமல் தொண்டையை அடைத்தது. வெட்கத்துடன் பகவானைத் துதிசெய்தாள் தேவி பத்மா.

தர்மமே உடலாக அமைந்தவரே! லக்ஷ்மீபதியே! ஜகன்னாத! ஸூத்தாத்மாவே! தயைபுரியும். உமக்கே அடிமையான அடியாளைக் காத்தருளும். தபஸ் தானம் ஜபம் வ்ரதம் முதலியவைகளால் யான் செய்த புண்யம் பலித்தது. தன்யையானேன். க்ருதக்ருத்யை ஆனேன். கிடைக்கத்தகாத உமது திருவடியை அடைந்தேன். இயற்கையில் கருணாமூர்த்தியான நீர் என் தவத்தைக்கண்டு ஸந்தோஷமடைந்தீர். உத்தரவளியுங்கள்! உமது பொன்னடித் தாமரையை வணங்கி தங்கள் நல்வரவை என் தந்தைக்குக்கூற வீடு செல்லட்டுமா? இங்ஙனம் பரிவுடனும் பக்தியுடனும் பத்மாகூற அதைக் கேட்டு ஆனந்தமடைந்த பகவான் அப்படியே ஆகட்டுமென அருள் புரிந்தார்.

அழகிற்கு இருப்பிடமான பத்மா உடனே வீட்டிற்கு விரைந்தாள். பகவான் தான் அவதரித்த விஷயத்தை ஒரு தூதன் மூலமாக விளக்கி எனது பிரார்த்தனைக் கிணங்கி நம் நாட்டிற்கே வந்து இருக்கின்றார். தன்னை மணம் புரிவதாகவும் மகிழ்சியுடன் மனமுவந்து அருள் புரிந்தார் என்பதைப் பத்மா தனது தோழிகள் மூலமாக தந்தை தாய்களுக்குத் தெரிவித்தாள். இதைக்கேட்ட ப்ருகத்ரதன் பேரானந்த மடைந்தான். பகவானைத் தர்சித்து வணங்கி ராஜபவனத்திற்கு அழைத்துவர உசிதமான ஸகல ஏற்பாடுகளையும் செய்தான். புரோஹிதர் அமாத்யர் பந்து மித்ரர் அனைவரையும் அழைத்தான். பூர்ணகும்பமேந்தினன். மங்கள வாத்யங்கள் முழங்கின. நால்வகை சேனைகளும் ஸுமங்கலிகளும் நாட்யப் பெண்களும் முன் சென்றனர்.

இயற்கையிலே அழகுவாய்ந்த காருமதி நகரம் பொற்கொடிகளாலும் பொற்தோரணங்களாலும் பசும் பந்தல்களாலும் வாழைகளாலும் அகில் தூபங்களால் ஒவ்வொரு வீட்டிலும் ஏற்றப்பட்ட ஸ்வர்ணதீபங்களாலும் அலங்கரிக்கப்பட்டு தேவலோகம் போல் இருந்தது. மனிதலோகத்திற்குக் கிட்டாத பாக்யமான பரமாத்மாவே மருமகனாக எழுந்தருளுகிறார், எனக்கேட்டுத் திரள் திரளாகக் கூடினர் நகரவாசிகள். தங்கள் வீட்டையும் தங்கள் உடலையும் அழகிய ஆடை ஆபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு பகவான் இருப்பிடத்திற்கு வரவேற்க வந்தனர். வெகு தூரத்திற்கப்பாலேயே தேரையும் தன் தன் வாஹனங்களையும் நிறுத்தி கால்நடையாகக்

கிளம்பினுர்கள். எங்கே பகவான்? எப்போது காண் போம்? என ஜனக்கூட்டம் அலேமோதுவதுபோல் நான் முன்னே செல்வேன் ! நான் காண்பேன் ! நான் காண வேணுமென ஒருவரை யொருவர் இடித்து மோதிக் கொண்டு வந்தனர்.

தடாகம் கண்முன் தோன்றிற்று! கரை மீது அழகிய மணிமயமான மேடை தெரிந்தது. அங்கே அழகிய் ஒரு வ்யக்தி காணப்பட்டது. அது ஸகல உலகிற்கும் சிறந்த கதியானதும் கருமேகம்போன்றதும், இந்த்ர தநுஸ் போல் பலவர்ணமுள்ள ஆபரணமும் பூண்டது. பீதாம் பரமணிந்தது. இயற்கையான தேஹ காந்தியால் உல கைப் பிரகாசப் படுத்துவது! அழகிற்கு இருப்பிடம்! மன்மதனது அழகைப் பகல் தீபம் போல் செய்வது ! ரூபத்திற்கு முக்கிய இடம். சீலமும் குணமும் உருவாக வந்தது! அதுதான் விஷ்ணு யஶஸ்ஸின் குலத்தை விளக்க வந்த குத்தி விளக்கு. கல்கி எனும் நாமம் பூண்டது. கண்டான் அரசன் ! கண்ணீர் பெருக்கினன். உடலெ லாம் மயிர்கூச்சல்! அடியற்ற மரம் போல் விழுந்து எழுந்தான். கரத்தைச் சிரத்தின்மீது குவித்து தழதழத்த நாக்குடன் கண்ட மடைத்துப் பேசமுடியாமல் பேசினன்.

ஈஶ்வர ! ஆஹா! பாக்யம். கனவிலும் கருதவில்லே இந்த பாக்யம் எனக்குக் கிடைக்குமென. குஹையில் உறங்கிய முசுகுந்தனுக்கு வலுவிலே வந்து பாக்யம் மளித்தது போலிருக்கின்றது! முற்பிறவியில் செய்த புண்யமோ ? முன்னோர் செய்த தவமோ! அடியேனு டைய குடிசைக்கு எழுந்தருளவேண்டும். என்மகளே ஏற்று என் குலத்தைப் பாவநமாக்க வேண்டும், எனப் பலவாறு போற்றி ஒப்பற்ற பூஜை செய்து ஸ்வர்ணமய மான ரதத்திலேற்றி நான்கு ராஜவீதிகளிலும் வல மாக வந்து ஆஶ்ரமம் போன்ற பாவநமாந அரண்மனே க்கு அழைத்துச் சென்ருன் மன்னன். அதிவிசித்திர மாய் அலங்கரிக்கப்பட்டிருந்த ஸ்வர்ணவேதியில் பக வானே அமர்த்தினன். 'புரோஹிதர் வேதோக்த விதிப்படி வரபூஜை செய்வித்தார். ஊரார் உறவினர் அனேவரும் அதைக் கண்டு களித்தனர்.

**பத்மாம் பத்ம பலாசாக்ஷீம் பத்ம நேத்ராய பத்மிநீம் I**
**பத்மஜாதேசத: பத்ம நாபாயாஹம் ததாமி தாம் II**

தாமரைக்கன்னியான பத்மாவை தாமரைக் கண்ணனும் பத்மநாபனுமான உமக்கு பிரும்மா கூறிய வண்ணம் கன்னிகாதானம் செய்கிறேன், என்று ஜலதாரை வார்த்து அளித்தார். ஆகாயத்தில் துந்துபி முழங்கிற்று. வானவர் பூமாரிப் பொழிந்தனர். மங்களவாத்யங்கள் முழங்கின. விதிப்படி பாணிக்ரஹணம் மாங்கல்யதாரணம் ஹோமம் அம்மி மிதித்தல் பொரிஹோமம் முதலியன வேதவழி வழுவாமல் செய்யப்பட்டன. அகமகிழ்ந்த அரசன் அந்தணருக்கு அபரிமிதமாக தாநம் வழங்கினுன். தம்பதிகளைப் பார்த்துப் போற்ருதாரில்லை. புகழாதாரில்லை. அனைவரும் விவாஹ விழாவைக் கண்டுகளித்தனர். அனைவரும் அவரை அர்ச்சித்து சிறிதுகாலமிங்கேயே தங்கி ஸதிபதிகளாகக் காக்ஷி அளிக்க வேண்டுமென எல்லோரும் வேண்டினர். பகவானும் அதற்கு இசைந்து அங்கு வஸித்தார். பத்மாவை மணக்க வந்து காமசக்கண்ணுல் அவளைக்கண்டவுடன் முக்கண்ணன் முன்னளித்த வரத்தால் பெண்களான அரசகுமாரர்கள் அச்சத்துடனும் நாணத்துடனும் புதிய தம்பதிகளைப் பணிந்து போற்றினுர்கள். முதலில் அவர்களை ரேவாநதியில் ஸ்நாநம் செய்துவிட்டு வரச்சொன்னுர். உடனே அவ்வளவு பெண்களும் தங்களது பழைய ராஜகுமார உடலைப்பெற்று பகவானைப் போற்றினர். அவர்களது ஶாபத்தை உணர்ந்தார் பகவான்.

பத்மா சிவந்த வர்ணமுள்ளவள். கல்கி கறுப்பு வர்ணம். ஆனுல் பத்மா கறுப்பு உடையையும் பகவான் பீதாம்பரத்தையும் தரித்திருந்தனர். ஸிம்மள தேசத்தின் சிற்றரசர்களும் ஸ்வயம்வரத்திற்காக வந்து பெண்ணுன ராஜகுமாரர்களும் கல்கியின் பிரபாவத்தைக் கேட்டு அவரை ஸ்தோத்ரம் செய்தனர். அது தசாவதாரங்களையும் கூறும் சூர்ணிகை போல வசக வடிவமாக அமைந்தது.

ப்ரபோ ! உமது மாயா விலாஸத்தால் மநதால் சிந்திக்கக் கூட முடியாத விசித்ரமான உலகைப் படைத்தீர். அதற்கு ஸாதனமான வேதத்தை ஸோமகன் எனும் அரக்கன் அபஹரிக்க அவனைக் கொல்ல மத்ஸ்ய ரூபமெடுத்தீர். ஹிரண்யாக்ஷனைக் கொன்று பூமியைக் காக்க வராஹரூபமெடுத்து உமது வீர்யத்தை உலகம் அறியச் செய்தீர்! தேவாஸுரர் ஒன்று சேர்ந்து அமிருதத்திற்காக

பாற்கடலைக் கடைய ஆரம்பிக்கையில் மத்தாகயிருந்த மலை உள்ளே முழுக, அதைத்தாங்க கூர்மாவதார மெடுத்த ப்ரபோ! ஏழைகளான எங்களுக்கு அருள் புரியும்.

மூவ்வுலகையும் ஜயித்து ஒப்பற்ற பலபராக்ரம முள்ளவனும் ஒருவராலும் மரணமில்லையென வரம் பெற்று தேவர்களையும் ஸாதுக்களையும் பீடித்து வந்த வனும் திதி புத்ரனுமான ஹிரண்யனைக் கொல்ல ந்ரு ஸிம்மாவதாரம் எடுத்த ப்ரபோ! ரக்ஷியும்.

மஹாபலியினிடமிருந்து இந்த்ரப் பதவியைச் சக்ரனு க்கு அளிக்க இந்த்ரனுக்குத் தம்பியாகப் பிறந்து பலியின் யாகத்தில் மூன்றடி மண்ணைக் கேட்டு அவன் தானம் செய்தபோது ஜலம் கையில் விழுந்தவுடன் த்ரிவிக்ரம ஞகி பூமியை அளந்து அவன் செய்த பூதாந பலனைத் தருபவர் போல் அவனது வீட்டில் த்வாரபாலகஞக இருந்த ப்ரபோ! எங்களை ரக்ஷியும். ஹைஹயன் முதலிய துஷ்டர்கள் மதங்கொண்டு தர்மத்தை மீறியபோது அவர்களைக் கொல்ல ஜமதக்நி குமாரராகத் தோன்றி இருபத்தோரு தலைமுறை க்ஷத்ரியர்களை அழிக்க பரசு ராமாவதாரம் செய்தீர். புலஸ்த்ய வம்ஶத்தில் விஶ்ரவஸ் ஸின் புத்ரஞகத் தோன்றி மூன்று லோகத்தையும் ஹிம் ஸித்த ராவணனைக் கொல்ல தசரத புத்ரஞகி விஶ்வா மித்ரரிடம் அஸ்த்ரங்களைப் பெற்று மனைவியுடன் காடு சென்று மனைவியை அபகரித்த ராவணனைச் சிக்ஷிக்க கட லில் அணைகட்டி ராக்ஷஸக் கூட்டத்துடன் ராவணனைக் கொல்ல ராமாவதாரம் செய்தீர்.

பலவகையான ராக்ஷஸர்களைக் கொல்ல யாதவ வம் ஶத்தில் வஸுதேவ புத்ரஞன பலராமஞக அவதரித்தீர்.

வேத விதிப்படி வேள்வி செய்வதை நிறுத்தி, புத்தி தத்வத்தைக்கொண்டு முக்திபெறலாமென க்ஞானம்போல் தோற்றும் புத்தியை உபதேசிக்க புத்தாவதாரம் செய்தீர்.

இப்பொழுது பௌத்த நாஸ்திக ம்லேச்சாதிகளைக் கண்டித்து வேதோக்த தர்மத்தை நிலைநாட்ட கல்கியாக அவதரித்து பெண்களாக மாறி சிரமப்படும் எங்களையும் மற்றவர்களையும் ரக்ஷித்து இஷ்டத்தைப் பூர்த்திசெய்து வருகிறீர்.

பிரும்மாதிகளுக்குக் கூட அறிய முடியாத மஹிமை வாய்ந்தவர்! பற்பல அவதார மெடுப்பவர்! காமிகள்

கருத்துக் கெட்டாதவர்! அத்தகைய குணக்கடலான தாங்கள் எங்களுக்கு இயற்கையான கருணையால்தான் தர்மந மளித்து இஷ்டத்தைப் பூர்த்தி செய்தீர்கள்.

## த்விதீயாம்சம் - நான்காம் அத்யாயம்.

பக்தர்களான அரசர்கள் கூறியதைக் கேட்டார் புருஷோத்தமன்! ஸந்தோஷமடைந்து வர்ணாஶ்ரம தர்மங்களையும் பிரவிருத்தி தர்மம் நிவிருத்தி தர்மம் அவரவர்களுக்கு வேதம் விதித்த நித்ய கர்மா வேதத்தின் ஆக்ஞை முதலியவைகளைக் கூறினர். அரசர்கள் ஆநந்தமடைந்து, மநிதருக்குப் பெண்பிறவியோ ஆண்பிறவியோ எதனால் ஏற்படுகிறது? இளமை யௌவநம் கிழத்தன்மை மரணம் ஸுகம் துக்கம் முதலியவைகள் எதனால் ஏற்படுகின்றன? இவைகளை விளக்கிக் கூறவேண்டுமென ப்ரார்த்தித்தனர். பகவான் இந்த இந்த கர்மாவால் இந்த இந்த பிறவி; இன்ப துன்பம் முதலியன உண்டாகின்றன என விவரித்துக் கூறினர். இதைக் கூறிக்கொண்டிருக்கும்பொழுது பகவான் கல்கி திடீரென அநந்தர் என்ற முநிவரை நினைத்தார். உடனே அநேக நாள் தீர்த்த யாத்ரை செய்தவரும் அநேக விரதங்களை அநுஷ்டித்தவருமான அநந்தர், "கல்கி அழைக்கின்றார், அவரது தர்மநத்தால் முக்தி கிடைக்கப்போகின்றது" என ஓடோடிவந்தார். பகவானது திருவடியில் விழுந்து பணிந்தார். எழுந்து துதித்தார். பகவன்! இதோ வந்துவிட்டேன்! என்ன செய்ய வேண்டும்? எங்கு செல்லவேண்டும்? உத்தரவு அளியுங்கள்! என விக்ஞாபித்தார்.

மஹர்ஷே! செய்ய வேண்டியது செய்தாயிற்று. பார்க்கவேண்டியதைப் பார்த்தீர்! அறிய வேண்டியதை அறிந்துவிட்டீர்! செல்லமுடியாத இடத்திற்குச் சென்றுவிட்டீர்! இனி நீர் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை! ஆதலால், திரும்பி வராத இடத்திற்குச்செல்லும் என்றார். பகவானை வணங்கி அநந்தர் கிளம்பும்போது அருகிலிருந்த ராஜகணங்கள், இருவர்கள் பேசிக்கொண்டதும் புரியாததால் ஆஶ்சர்யமடைந்து, பகவானை வணங்கிக் கேட்டார்கள். பகவன்! மஹர்ஷி என்ன கூறினர்? தாங்கள் என்ன சொன்னீர்கள்? இதை அறிய விரும்புகின்றோம். நாங்கள் கேட்கக் கூடியதானல் தயைசெய்து இதைக் கூறுங்கள் என்றனர். அதை மஹர்ஷியையே கேளுங்கள்!

அவரே சொல்வார்! என்று பகவான் கூறியவுடன் அரசர்கள், கிளம்பத் தயாராக இருக்கும் அநந்த முனிவரை நமஸ்கரித்தார்கள். மஹர்ஷே! தயை புரியுங்கள்! இருவர்க்கும் நடந்த ஸம்வாதத்தைக் கூறுங்கள்! என்றனர்.

## அநந்தன் சரிதம்.

ஐயா! புரிகா என்ற புரியிலே வித்ருமர் என்ற வேதமறிந்தவரும் தர்ம ஶீலரும் புகழ் பெற்றவருமான ஒரு புண்ய ஶீலர் உண்டு. அவரே எனது பிதா. ஸோமா என்பவள் எனது மாதா. அவள் மஹா பதிவ்ரதை. அவ்விருவர்க்கும் தள்ளாத வயதான பிறகு யான் பிறந்தேன். நான் ஆணும் பெண்ணுமில்லாத பேடி. பேடியால் பரலோகம் கிடைக்காது. எந்தவிதமான வைதிக கர்மாவையும் செய்வதற்கில்லே. ஆதலால் என்னைப் பார்த்து ஆராத்துயரமடைந்தனர். துக்கம் ஶோகம் பயமெல்லாம் என் பெற்றோர்களை வாட்டின. இருவர்களும் வீட்டைவிட்டு ஶிவ வநம் சென்றனர். வேதவிதிப்படி ஶிவனைப் பூஜித்தனர். த்யாந ஆவாஹனம் முதலிய பதினாறுவகை உபசாரங்களைச் செய்தனர்.

சிவம் சாந்தம் ஸர்வலோகைக நாதம் பூதாவாஸம் வாஸுகீ கண்ட பூஷம் | ஜடா ஜூடாபத்த கங்கா தரங்கம் வந்தே ஸாந்த்ரா நந்த ஸந்தோஹ தக்ஷம் ||

மங்களமாய் ஶாந்தனுய் ஸர்வலோகங்களுக்கும் ஒரே நாதனுய் ஸர்வ பிராணிகளுக்கும் இருப்பிடமாய் வாஸுகியை கழுத்திற்கு ஆபரணமாகக் கொண்டவரும் ஜடைமுடியில் அலேவீசும் கங்கையைத் தரித்தவரும் ஆநந்த ஸ்வரூபமாயும் உள்ள ஶிவனை நமஸ்கரிக்கிறேன் எனப் பலவகை ஸ்தோத்ரங்களால் துதித்தனர். வரமளிப்பவரில் சிறந்த சிவன் விருஷபாரூடராக என் தந்தை தாய் முன் தோன்றி வரத்தைக் கேட்டுக்கொள் என்ருர். நான் புத்ரனுக இல்லேயே என்ற தாபத்தால் வருந்திய என் பிதா நான் புருஷனுக வேண்டும் என்ற வரத்தையே கேட்டார். பார்வதீ தேவியும் ஆமோதிக்க பகவான் அப்படியே உமது குழந்தை புருஷனுவான் என்று வரம் அளித்து மறைந்தார்.

இந்த வரத்தைப் பெற்று அளவுகடந்த ஆநந்தத்துடன் வீட்டிற்குத் திரும்பினுர்கள். ஶிவனது அருளால் ஆணுன என்னேக்கண்டு பேராநந்த மடைந்தனர். எனது

பன்னிரண்டாமாண்டிலே எனக்கு மணம்செய்விக்க முயற்சித்தனர். தங்களுக்கு வயதானதால் விரைவில் புத்ரனுக்கு மணம் செய்வித்து மாரில் மாலையும் சந்தனமுமாக மகனைக் காண அவாகொண்டனர். பந்துக்களைக்கொண்டு குலம் ஶீலம் குணம் வயது அழகு முதலியன பொருந்திய பெண்ணைத் தேடினர். யக்ஞராதர் என்பவரின் புத்ரி மாநினியே மநதிற்கிசைந்த மருமகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டாள். நல்லதோர் நாளிலே விதிமுறை தவறுமல் விவாஹம் நடந்தது. அழகுவாய்ந்த மாலினிக்கு வசப்பட்டு க்ரஹஸ்த தர்மத்தை நடத்திவந்தேன். சிலநாட் சென்றபின் எனது பெற்ரோர்கள் ஸ்வர்க்கம்சென்ருர்கள். அவர்களுக்குப் பரலோகத்திற்கு வேண்டிய கர்மாக்களை ஞாதிகளுடனும் பந்துக்களுடனும் சேர்ந்து விதிப்படிச் செய்து முடித்தேன். எண்ணிறந்த பிராம்மணர்களுக்கு அன்னதானம் செய்தேன். பெற்ரோரை இழந்த துன்பத்திஞல் மிக வருந்தி விஷ்ணுஸேவையிலீடுபட்டேன். எனது ஜபத்திஞலும் பூஜையிஞலும் ஸந்தோஷம் அடைந்த பகவான் ஸ்வப்பனத்தில் தோன்றி எனக்கு நல்லுபதேசம் செய்தார். ஸ்நேஹத்திஞல் மோஹம் அடைவது மாயையின் கார்யமாகும். இவர் எனது பிதா. இவளெனது மாதா என்று மமதையுள்ளவர்களுக்கு சோகம், துக்கம், பயம், கிழத்தன்மை, ம்ருத்யு முதலியவைகள் தோன்றும் என்ருர். இதைக்கேட்டு யான் அவரிடம் சில விஷயம் பேச முயன்றபோது பகவான் திடீரென மறைந்தார்.

யான் விழித்துக்கொண்டு ஆச்சர்ய மடைந்து திகைத்து நின்றேன். அதுமுதல் ஒரு வைராக்யம் தோன்றிற்று. மனேவியுடன் கூடி புரிகாபுரியை விட்டுவிட்டு புருஷோத்தமம் எனும் திவ்ய க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தேன். அங்கே தென்புறத்தில் ஓர் ஆச்ரமம் அமைத்துக்கொண்டு என்னைச் சார்ந்தவர்களுடன் ஹரி ஸேவை செய்துகொண்டுகாலம் கழித்தேன். மாயையைத் தர்சிக்க வேண்டுமென்பது என் அவா. அதை விக்ஞாபனம் செய்வதற்குள் கனவில் தோன்றிய பகவான் மறைந்தார். இங்குள்ள பகவானை நாடித் தவம் செய்யக் கருதினேன். எப்படியாவது மாயா தர்ஶனம் செய்ய பகவானைப் பாடியும் அவரது எதிரில் ஆடியும் அவரை த்யானம் செய்தும் அவரை ஆராதித்தேன். இங்ஙனம் பன்னிரண்டு ஆண்டுகள் சென்றபின் ஒரு த்வாதசியன்று

பாரணை செய்வதற்குமுன் பந்துக்களுடன் கூட, ஸமுத்ர ஸ்நானம் செய்யக் கிளம்பினேன். அலை வீசி கோலா ஹலமாயுள்ள கடலில் மூழ்கினேன். எழுந்திருக்க முடியாமல் தவிக்கும்பொழுது ஜலத்தில் ஸஞ்சரிக்கும் பிராணிகள் என்னைத் தின்ன ஆரம்பித்தன. அலையினால் அடிபட்டு மூழ்கியும் எழுந்தும் மனங்கலங்கி ப்ரக்ஞையற்று இருந்தேன்.

### மாயா தர்சநம்.

அந்த நிலையில் ஒரு பெரும் காற்றுத்தோன்ற அலையுடன் என்னைத் தென்கரையில்கொண்டு தள்ளிற்று. அங்கு வ்ருத்தசர்மா என்ற பிராம்மணோத்தமர் ஸந்த்யானுஷ்டானத்திற்காக வந்து என்னைக் கண்டார். ஸந்த்யையை முடித்துக் கொண்டு தன் நகரத்திற்கு என்னை யழைத்துச் சென்றார். அவர் மிக்க தர்மசீலர். செல்வத்தையும் உத்தம மனைவியையும் புத்ரனையும் படைத்தவர். எல்லோருமாகச் சேர்ந்து என்னை நோயற்றவனாகச் செய்தார்கள். என்னைப் புத்ரனைப்போல் பரிவுடன் பரிபாலித்து வந்தார்கள். நான் அங்கிருந்து திக்கு தேசம் ஒன்றும் அறியாதவனாகப் பரமதீனனாக அவர்களைத் தாய் தந்தையர்களென நினைத்து அங்கு வாஸம் செய்து வந்தேன். வேத சாஸ்த்ர மறிந்தவனும் தர்மானுஷ்டானம் நிறைந்தவனுமான எனக்கு அவர்கள் தங்கள் பெண்ணையளித்து விவாஹம் செய்வித்தார்கள். ஸ்வர்ண வர்ணமுள்ளவளும் அழகும் சீலமும் குணமும் வாய்ந்தவளுமான சாருமதி என்ற அப்பெண்ணை மாநினிபோல் நினைத்து மகிழ்ந்து இருந்தேன். அவளுடன் கூட ஆங்கு பல போகங்களை அனுபவித்து ஐந்து புத்ரர்களையும் உண்டுபண்ணி அந்த ஆநந்தத்தில் அமிழ்ந்திருந்தேன். ஜயன் விஜயன் கமலன் விமலன் புதன் என்று பெயர் வாய்ந்த ஐந்து குமாரர்களும் மற்ற பந்துக்களும் சேர்ந்து தேவர்கள் இந்திரனுக்கு இன்பமளிப்பது போல் எனக்கு இன்பமளித்தார்கள்.

அவர்கள் செய்யும் பூஜையைக் கண்டு ஆனந்தம் அடைந்தேன். முதல் புதல்வனான புதனுக்கு விவாஹம் செய்ய எண்ணியபோது தர்மஸாரன் எனும் ப்ராமணோத்தமர் தனது பெண்ணைக் கொடுக்க முயற்சித்தார். அப்யுதயம் என்ற கர்மாவைச்செய்து தேவரிஷி பித்ரு தர்ப்பணம் செய்ய ஸமுத்ர தீரம் சென்றேன். அங்கு ஒரு அலை

என்னை ஸமுத்திரத்திற்குள் இழுத்துச்சென்றது. வெகு ஸாமர்த்யத்துடன் தப்பிக்கரை ஏறினேன். ஆங்கு பாரண தினத்தில் என்னுடன் ஸமுத்ர ஸ்நானம் செய்யவந்த புருஷோத்தம க்ஷேத்ரவாஸிகளான பந்துக்களைக் கண்டேன். எனக்கு ஒன்றும் புரியவில்லை. திகைத்து விழித்தேன். விருத்த சர்மா என்னை அழைத்துப் போவதற்கு முன் என்ன வயதோ அதே வயது வேஷம் உள்ள என்னைக் கண்டு நானே ஆஶ்சர்யப்பட்டேன். நான் சாருமதியின் பதியா? மாநிநியின் மணாளனா? ஐந்து புத்ரர்களைப்பெற்று புதனது மணத்திற்காக அப்யுதயாங்க தர்ப்பணம் செய்ய வந்தவனா? மாயா தர்ஶனம் செய்வதற்காக புருஷோத்தம பகவானை ஸேவித்துப் பாரணா ஸ்நாநத்திற்காக வந்தவனா? என்று புரியாமல் இது என்ன? நினைவா? கனவா? இந்த்ர ஜாலமா என விழித்தேன்.

என்னைப் பார்க்கும்பொழுதே ஏதோ ஆஶ்சர்யப்படுபவள்போலத் தோற்றியதால் அனைவரும் கூடி, அநந்தா! என்ன ஆஶ்சர்யங்கண்டீர் ஜலத்தில்? பக்தரல்லவா? உண்மையைக் கூறும்! பின்னர் அதைப் பார்த்துக் கொள்வோம்! இப்போது பாரணைச்செய்யவாரும்! என்றழைத்தார்கள். நான் ஒன்றையும் பார்க்கவுமில்லை! கேட்கவுமில்லை! நான் பகவானது மாயையைக் காண வேணும் என ஆசைகொண்டேன்! அந்த பகவானது மாயையால் ஏமார்ந்து இந்த்ரியங்கள் கலங்க மோஹம் அடைந்தேன்!

பெற்றோரிடம் கொண்ட ஆசை மோஹ மென்றார் பகவான். அதை அகற்ற வழி தேடாமல் மாயையைத் தர்சிக்க விரும்பினேன். சாருமதியிடமும் புத்ரர்களிடமும் ஆசை உண்டாயிற்று. அதனால் ஓரிடத்திலும் மநதிற்கு ஶாந்தி ஏற்படவில்லை. என்னையே மறந்தேன். மனைவி பொருள் மனை மக்கள் புத்ர விவாஹம் முதலியவைகளால் நான் அநந்தன் என்பதை மறந்தேன். பரவஶனாய் மூடனாய் நின்ற என்னைப் பார்த்து மாநிநீ அழுதாள்! ஏதேதோ கூறி, என் அருகில் அலறினாள்! இங்கு இவளைப் பார்த்தவுடன் சாருமதியின் நினைவு வந்தது! இவளை விட்டு அவளை மணந்தேனே என பயந்து நின்றேன்!

இப்படித் திகைக்கும் எனக்கு அறிவூட்ட ஒரு துறவி வந்தார். அவர் தீரர். எல்லாமறிந்தவர். பூர்ணர். சிறந்த தர்மத்தை அறிந்தவர். ஸூர்யனைப்போல் ப்ரகாசமுள்ள

வரும் க்ஞாந மூர்த்தியும் ஶாந்தரும் சுத்தரும் ஶோக மோகங்களைப் போக்குபவருமான அவரை வணங்கிப் பூஜித்து எனது நன்மையில் நாட்டமுள்ள எனது அங்கங்கள் சில விஷயங்களைக் கேட்டன அவரிடம்.

## த்விதீயாம்சம் - ஐந்தாம் அத்யாயம்.

அந்த ஹம்ஸர் உசிதமான பிக்ஷையைச் செய்து ஆஸநத்தில் அமர்ந்து எனது விஷயத்தை விஸ்தாரமாக வர்ணித்தார். எல்லோரும் அமர்ந்து அதை ஆதரவுடன் கேட்டார்கள். அநந்தரே! உனது மனைவி சாருமதீ என்பவள். அவளிடம் புதன் முதலிய ஐந்து புத்ரர்கள் உண்டானார்கள். புதனுக்கு விவாஹம் நடக்கும்பொழுது தநம் ரத்நம் நிறைந்த மாடமாளிகை இவைகளை விட்டுவிட்டு எப்பொழுது இங்கு வந்தாய்? உனது புத்ரனுடைய விவாஹத்திற்கு என்னை அழைத்துவிட்டு நீ அங்கில்லாமல் ஏன் இங்கு வந்துவிட்டாய்? அங்கு உன்னை எழுபது வயது உள்ளவனாகக் கண்டேன். இப்பொழுது முப்பது வயதுள்ளவனாகக் காணப்படுகிறாய். இதைக்கண்டு ஆஶ்சர்யப்படுகிறேன். இப்பொழுது உனக்கு பார்யையாக அருகிலுள்ள மாநிநியை நான் அங்கு காணவில்லை.

நான்தான் எப்படி எங்கிருந்து இங்கு வந்தேன்? யார் இதை விளக்கக்கூடியவர்? அங்கு கண்டவன்தானா நீ? அங்கிருந்த ஸன்யாஸிதானா நான்? நாமிருவரும் இங்கு கூடியது இந்த்ர ஜாலம் போலல்லவோ இருக்கிறது? நீ கிருஹஸ்தன். ஸ்வதர்மத்தை அறிந்து அநுஷ்டிப்பவன். நான் துறவி. பரமாத்ம ஸ்வரூபத்திலீடுபடுபவன். நம்மிருவர்களுடைய ஸம்வாதம் குழந்தைக்கும் பித்தனுக்கும் உள்ள ஸம்வாதம் போலாகும். ஆகையால் மூன்று லோகத்தையும் மோஹிக்கும்படிச் செய்யுமிது ஈஶனுடைய மாயையே. அதன் ஸாமர்த்தியத்தை அத்வைத ஞானமுள்ளவனே நன்கு அறிவான். இங்ஙனம் துறவி எனக்குக் கூறினார்.

## மாயா ஸ்வரூபம்.

இக் கதையைக்கூறி சூதபுராணிகர் மார்க்கண்டேயரைப் பார்த்து மேலும் சில மாயாமயமான விஷயங்களைக் கூறினார். மார்க்கண்டேய முனிவரே! நீர் பல்லாண்டு ஜீவித்திருப்பவர்! ஆதலால் உமக்கு உலகம் ப்ரளயமடைந்த விஷயம் தெரிந்ததே. மோஹத்தை உண்டு

பண்ணும் மாயையானது வழிப்போக்கனை மயக்கும் தாஸிபோல் உள்ளது. மாயையினிடம் தமஸ் என்ற அந்தகாரம் நிறைந்திருக்கின்றது. அதனால் அது பலருக்கும் பலவகையான துன்பத்தைத் தருகின்றது. ஸகல உலகையும் வ்யாபித்திருக்கின்றது. அந்த மாயைக்கு வசமாகாதவர் எவருமிலர். ப்ரளயத்தில் மூன்று லோகமும் மறைந்து தன்மாத்ரையை அடைகின்றன. பிறகு பரம புருஷன் உலகைப் படைக்க விரும்புகின்றார். அப்பொழுது அவர் புருஷன் ப்ரக்ருதி என்ற இரண்டு தன்மையை அடைகின்றார். இவ்விருவர்களும் பலகாலம் சென்ற பின் தங்களுடைய காந்தியினால் மஹத் என்பதை உண்டு பண்ணினர். அதனின்று கால ஸ்வபாவ கர்ம வடிவமான அஹங்காரமுண்டானது. அதிலிருந்து த்ரிகுண வடிவமான ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் உண்டானார்கள். அவர்களே உலக ஸஞ்சாரத்திற்குக் காரணமாவார்கள். ப்ரம்மத்தின் ஸன்னிதியால் ப்ருக்ருதியில் பஞ்சமஹா பூதங்களும் தன் மாத்ரைகளும்முண்டாயின. பிறகு ப்ரஹ்மாண்டத்தில் ஜனன மரணம் வாய்ந்த தேவாஸுர நரர் முதலிய ஜீவராசிகள் உண்டாயின. மாயையினால் ஜீவன் என்றும் புருஷன் என்றும் பரமாத்மாவென்றும் பல பேதங்கள் உண்டு பண்ணப்பட்டன.

ஸம்ஸாரத்தில் ஈடுபட்ட ஜீவன் ஆத்ம கதியை ஒருபொழுதும் அறிவதில்லை. மாயை ப்ரஹ்மாதி தேவர்களையும் வசப்படுத்தக்கூடிய சக்தி வாய்ந்தது. ஆச்சர்யமான பல குணம் வாய்ந்த மாயை, மூக்கில் கயிற்றைக் கோர்த்து மனிதர் மாடுகளை ஆட்டுவது போலும் பக்ஷிகளின் காலில் கயிற்றைக்கட்டி கூட்டில் அடக்கி வைப்பது போலும் ஜீவராசிகளை யடக்கி ஆட்டி வைக்கின்றது. வாஸனை எனும் குதிரைகளால் ப்ரவாஹம்போல் ஓடுவதுமான குணமயமான மாயையைத் தாண்ட ஆசை உள்ளவர்களே ஈச்வரர்கள். ஜன்ம ஸாபல்யத்தையடைந்தவர்கள். என்று ஸூதர் கூறியதைக்கேட்ட மார்க்கண்டேயர் முதலிய மஹரிஷிகள், அனந்தர் அரசர்களுக்குக்கூறிய சரிதத்தை பூர்ணமாகக் கூறும்படிக் கோரினார்கள். ஸூதர் கூறினார்: ஸன்யாஸி கூறியதைக்கேட்டு அனந்த முனிவர், மாயையின் ஸ்வரூபத்தை நன்கு உணர்ந்தார். நான் அந்த மாயைக்கு வசப்பட்டதாலும் மாயையைக்காண அவா கொண்டதாலும் இவ்வளவு துன்பத்திற்கு ஆளானேன்.

